சிவ சிவ சிவ திருச்சிற்றம்பலம் சிவ சிவ சிவ

சிவ சிவ

# திருத்தொண்டர் புராணசாரம்

சிவ சிவ

## (மூலமும் கதைச் சுருக்கமும்)

சிவ சிவ

## நாயன்மார்கள் குருபூஜை வழிபாடு

சிவ சிவ

சிவ சிவ


பதிப்பாசிரியர்

சிவ அமரர் *T.M.* **குமரகுருபரன்பிள்ளை**, **B.A., B.L.** சிவ

ஸ்ரீ வைகுண்டம்


சிவ சிவ

சிவ ஸ்ரீபவ ஆண்டு ஐப்பசி மீ 4உ (21-10-94) நின்றசீர் சிவ
நெடுமாற நாயனர் குருபூஜை முன்னிட்டு சென்னை
தெய்வீகசித்தாந்த இலக்கிய மன்றத் தலைவர்
சிவ சிவநெறிச் செம்மல் சிவ

சிவ உயர்திருவாளர் **ஒளியகம் நா. ர. ஆடலரசு** சிவ
அவர்களின் திருக்கரத்தால் வெளியிடப்பட்டது.



சிவ


வெளியீடு எண். 10


சிவ

சிவ சிவ சிவ திருச்சிற்றம்பலம் சிவ சிவ சிவ

சிவசிவ

# முகவுரை

பேரன்புடையீர்,

ஆடூர்காசி வைத்தியநாத சிவாச்சாரியார் (குரு) திருவடிகளை வணங்கித் திருப்பெருந்துறை ஸ்ரீயோகாம்பிகை உடனாகிய ஆத்மநாதப் பெருமானை வணங்கித் தங்களையும் வணங்குகிறோம்.

திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் கயிலைமாமுனிவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் 13-7-1994உ கடிதப்படி திருத்தொண்டர் புராணசாரம் (மூலமும் கதைச்சுருக்கமும்) 15-3-1964உ காசி மடத்து வெளியீட்டினை மீண்டும் மறு பதிப்பு அனுமதி பெற்று பதிப்பிக்கப் பெற்றது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசி மடத்து அதிபர் அவர்களுக்குப் பணிவு கனிந்த வணக்கம் தங்கள் திருவடிகளில் சமர்ப்பிக்கிறோம். இந்நூல் வெளிவருவதற்கு பிரதியை கொடுத்துதவியவர் ஸ்ரீ வைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் செயலர் உயர்திருவாளர் **P. முத்தரசு.** M.A.B.T. அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூல் நாயன்மார்களுடைய குரு பூஜைக்குச் சிறந்த வழிபாடு நூலாகும். குரு பூஜையில் பயன்படுத்தி நாயன் மார்கள் திருவருளைப் பெறப் பிரார்த்திக்கிறோம்.

சுபம்

அடியவன்

வெளியிட்டோர்

**திருப்பெருந்துறை ஸ்ரீயோகாம்பிகை திருமுறைக்குழு**

113, P.T. ராஜன் ரோடு, மதுரை-625 014.

போன் : 44060

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# எங்கள் குருவின் அணிந்துரை

அனாதி மலமுக்த பசுபதியாகிய சிவபெருமான்

அனாதி மலபெத்த ஆன்மாக்கள் உய்யும் வண்ணம்

அருளிச்செய்த நூல்கள், வேத சிவாகமங்களேயாம்

அவ்வேத சிவாகமங்களுக்கு மாறுபடா வண்ணம்

(பதி-பசு-பாசம் இவ்வுண்மைகளாகும்)

அவ்வுண்மைகளை சைவ சமயாசார்யர்களான திருஞான சம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாயிகள், மாணிக்கவாசக சுவாமிகள் வாயிலாக அருளிச் செய்தவைகளாகும். அவைகளே செந்தமிழ் மொழியில் உள்ள பன்னிரு திருமுறைகளாகும்.

அதில் உள்ள **அற்புதப்பதிகங்களை** முறையாக நல்லாசிரியரிடத்து சிவதீக்ஷை பெற்றுக்கொண்டு ஓதி உணர்ந்து பிறவிப்பயனடைய மிகவும் உபயோகமாகும்படி **அற்புதப்பதிக நூல்** தொகுத்து **மதுரை ஸ்ரீ யோகாம்பிகை திருமுறைக்குழு அன்பர்கள்** வெளியிட்டு உதவுவது சாலச் சிறந்ததாகும். அன்பர்கள் யாவரும் பெற்றுப் பயன்பெற வேண்டுகிறோம்.

வாழ்க சீரடியாரெல்லாம்
திருச்சிற்றம்பலம்

**காசி வைத்தியநாத சிவாச்சார்யார்**
ஈரோடு

# ஆசிரியர் வரலாறு

பெரிய புராணம் என்னும் இவ்வரிய நூலை இயற்றியவர் சேக்கிழார் என்னும் தண்டமிழ்ச் சான்ருேர் ஆவார். இவர் பண்டைப் பெருமை மிக்க தொண்டை நாட்டின்கண் உள்ள குன்றத்தூரில் தோன்றினர்; சேக்கிழார் வேளாண் மரபைச் சேர்ந்தவர். சேக்கிழார் என்பது குடிப் பெயர். இவரது பிள்ளைப் பெயர் அருள்மொழித் தேவர் என்பதாகும்.

சேக்கிழார் காலத்தே சோழ நாட்டை ஆண்டவன் அநபாய சோழன். அவன் கல்வி நலமும் கேள்வி வளமும் நிறைந்த சேக்கிழாரின் அருமை பெருமைகளை உணர்ந்து அவரைத் தன் முதலமைச்சராக அமைத்துக் கொண்டான்; உத்தமச் சோழப் பல்லவர் என்னும் பட்டப் பெயரும் கொடுத்து அவரைப் பெருமைப்படுத்தினன்.

அக்காலத்தே சமண சமயம் தலைநிமிர்ந்து சைவத்தை அடக்கி நின்றது. அரசனும் சைவ சமயத்தைப் போற்ருமல் சமண நூல்களில் மூழ்கிக் கிடந்தான். அதுகண்ட சேக்கிழார், தகுந்த காலம் பார்த்து, ''இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் அளிக்கக் கூடிய சிவ கதைகள் உள்ளன'' என்று கூறி, சிவனடியார்களின் பெருமையை விளக்கிக் கூறினர். அரசன் அவற்றை ஒரு புராணமாகப் பாடித் தருமாறு அவரை வேண்டினன்.

அரசன் வேண்டுகோளுக்கு இணங்கிய சேக்கிழார் தில்லைக்குச் சென்று நூல் பாடத் தொடங்கினர். கடவுள் 'உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுத்தார். சேக்கிழார் பெருமான் அதனையே தம் நூலுக்கு முதலாக அமைத்து ஓராண்டில் அப்புராணத்தைப் பாடி முடித்தார். தில்லை மூவாயிரவர் முன்னிலையில் சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் புராணம் அரங்கேற்றப்பட்டது. அரங்

கேற்றத்தின் முடிவில் அரசன் புராணத்தையும் சேக்கிழாரையும் யானை மீதேற்றி நகர்வலம் செய்வித்தான்; தானே அவருக்குப் பின்னுலிருந்து தன் கையால் குடை பிடித்துச் சாமரம் வீசினுன்; அவருக்குத் ''தொண்டர் சீர்பரவுவார்'' என்னும் சிறப்புப் பெயரும் அளித்துப் பெருமை செய்தான். சேக்கிழார் சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் நம்பி பாடிய திருத்தொண்டர் திருவந்தாதி, காரைக்கால் அம்மையார் பாடல்கள், திருமூலர் திருமந்திரம், கழறிற்றறிவார் இயற்றிய பொன் வண்ணத்தந்தாதி, தெய்வ உலா முதலிய நூல்களை ஆதாரமாகக் கொண்டு இந்நூலை இயற்றினுர். இவர் கி.பி. பதினோராம் நூற்ருண்டைச் சார்ந்தவர். பன்னிரண்டாம் நூற்ருண்டினர் என்றும் சிலர் கூறுவர். வைகாசித் திங்களில் பூசநட்சத்திரத்தில் இறைவனேடு இரண்டறக் கலந்தார்.

சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச்செய்த

# திருத்தொண்டத் தொகை

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
    திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கும் அடியேன்
    இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
    விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
    ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர்க் கடியேன்
    ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
    கடவூரிற் கலையன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
    எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க் கடியேன்
    ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
    முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
    திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
    வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
    ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

திருநின்ற செம்மையே செம்மையாகக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்த மங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தர்க் கடியேன்

கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கும் அடியேன்
நிறைக் கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் அருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனும் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதன்மேல் அரவாட ஆடிப்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவோர் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

# வரலாற்றில் வரும் பெயர்கள்

1. தில்லைவாழ் அந்தணர் : தில்லையில் நடராசப் பெருமானுக்கு வழிபாடு புரியும் அந்தணர்கள்.

2. திருநீலகண்டர் : சிவனடியார்களுக்குத் திருவோடு கொடுத்து அறம் புரிந்தவர்.

3. இயற்பகையார் : இல்லையென்னாது எதையும் அளித்தவர். தம் மனைவியையே சிவனடியார்களுக்கு ஈந்து புகழ் பெற்றவர்.

4. இளையான்குடி மாறர் : நள்ளிரவிலும் அடியார்க்கு அமுது அளித்தவர்.

5. மெய்ப்பொருள் நாயனார் : அடியார்கள் திருவேடத்தையே மெய்ப்பொருளாகக் கொண்டவர்.

6. விறன்மிண்ட நாயனார் : தேவாசிரிய மண்டபத்தே வீற்றிருந்த சிவனடியார்களை வணங்காமையால் சுந்தரரையும் பகைத்தவர்.

7. அமர்நீதி நாயனார் : அடியார்க்குப் போர்வையும் அரைஞாணும் கோவணமும் வழங்கியவர்.

8. எறிபத்த நாயனார் : கையிலிருந்த மழுவாயுதத்தால் சிவனடியார்களின் பகைவரைக் கொன்று சைவத்தை வளர்த்தவர்.

9. ஏனாதிநாத நாயனார் : திருநீற்றின் பொலிவைக் கண்டு அதிசூரனைக் கொல்லாமல் தாமே இறந்தவர்.

10. கண்ணப்ப நாயனர் : சிவபெருமானுக்குத் தம் கண்களையும் கொடுத்தவர்.

11. குங்கிலியக் கலய நாயனர் : நாடோறும் சிவபெருமானுக்குக் குங்கிலியத் தூபமிட்டவர்.

12. மானக்கஞ்சாற நாயனர் : தம் மகளின் நீண்ட கூந்தலை சிவனடியாரின் பஞ்சவடிக்காக அளித்தவர்.

13. அரிவாட்டாய நாயனர் : பூசைப் பொருள்கள் தவறித் தரையில் உள்ள நிலவெடிப்பில் சிந்தியமையால் தம் ஊட்டியைத் தாமே அறுக்க முனைந்தவர்.

14. ஆனய நாயனர் : பஞ்சாட்சரத்தை வேய்ங்குழலில் இசைத்து முத்தி பெற்றவர்.

15. மூர்த்தி நாயனர் : சந்தனக் கட்டைக்கு முட்டு வந்த போது தம் முழங்கையைத் தேய்த்து இறைவனுக்கு காப்பிட முயன்றவர்.

16. முருக நாயனர் : மலர்மாலைகள் தொடுத்து இறைவனை வழிபடும் திருப்பணியில் ஈடுபட்டவர்.

17. உருத்திர பசுபதி நாயனர் : நாடோறும் திருவுருத்திர மந்திரங்களை ஓதி முக்தியடைந்தவர்.

18. திருநாளைப் போவார் நாயனர்: பறையர் குலத்தில் தோன்றியவர். தில்லை'யில் தீக்குள் புகுத்து வேதியராகி முத்தியடைந்தவர்.

19. திருகுறிப்புத் தொண்டர் நாயனர்: அடியார்களின் ஆடைகளை அழுக்கு நீக்கி உதவியவர்.

20. சண்டேசுவர நாயனுர்: சிவபூசைக்குரிய பாற்குடங்களை உதைத்த தந்தையின் காலை வெட்டியவர்.

21. திருநாவுக்கரசு சுவாமிகள்: சைவமும், தமிழும் தழைக்கத் தேவாரம் பாடியவர்; புறச்சமய இருளை நீக்கியவர்.

22. குலச்சிறை நாயனுர்: பாண்டிய மன்னனின் முதல் அமைச்சராக இருந்து சைவ நெறியைக் காத்தவர்.

23. பெருமிழலைக் குறும்ப நாயனுர்: சுந்தரமூர்த்தி நாயனுரையே தொழுது அவரோடு சிவப்பேறு பெற்றவர்.

24. காரைக்காலம்மையார்: இறைவனருளால் மாயமாங் கனி பெற்றவர்.

25. அப்பூதியடிகள்: திருநாவுக்கரசரின் திருப்பெயரை ஓதிச் சிவப்பேறு பெற்றவர்.

26. திருநீலநக்க நாயனுர்: திருஞான சம்மந்தரின் திருமணத்தை தரிசித்துச் சிவபேற்றை அடைந்தவர்.

27. நமிநந்தியடிகள்: சமணர்கள் எண்ணெய் தர மறுத் தமையால் குளத்து நீரையே கொண்டு விளக்கு எரித்தவர்.

28. திருஞானசம்மந்தர்: ஞானப்பால் உண்டவர்; தேவாரம் பாடிச் சைவமும் தமிழும் தழைக்கச் செய்தவர்.

29. ஏயர்கோன் கலிக்காம நாயனுர்: சுந்தரர் சிவ பெருமானைத் தூதனுப்பியதால் அவரைப் பகைத்துப் பின்னர் சூலை நோய் அடைந்து சுந்தரரின் தொடர்பைப் பெற்றவர்.

30. திருமூல நாயனுர்: திருமந்திரம் பாடிய சித்தர்.

31. தண்டியடிகள் நாயனார்: திருவாரூர் கமலாலயைக் குளத்தைத் திருத்தும் பணியில் ஈடுபட்டவர்.

32. மூர்க்க நாயனார்; சூதாடி வென்ற பொருளால் சிவனடியார்கட்கு அன்னதானம் செய்தவர்.

33. சோமாசி மாற நாயனார்: சிவ வேள்விகள் புரிந்து சுந்தரரை வழிபட்டுச் சிவபதம் அடைந்தவர்.

34. சாக்கிய நாயனார்: நாடோறும் கற்களையே மலராகச் சிவலிங்கத்தின் மீது எறிந்து தம் பக்தியை வெளிப்படுத்தியவர்.

35. சிறப்புலி நாயனார்: திருவைந்தெழுத்தை ஓதித் தாம் புரிந்த வேள்வியைச் சிவபெருமானுக்கே தத்தம் செய்தவர்.

36. சிறுத்தொண்ட நாயனார்: இல்லை என்னாமல் பிள்ளைக்கறி சமைத்துச் சிவனடியாரை வழிபட்டவர்.

37. கழறிற்றறிவார் நாயனார்: உழமண் பூசிய சலவைத் தொழிலாளனைச் சிவவேடத்தை நினைவூட்டியதாக வணங்கியவர்.

38. கணநாத நாயனார்: திருஞானசம்பந்தரை வழிபட்டுத் திருக்கயிலையை அடைந்தவர்.

39. கூற்றுவ நாயனார்: நடராசப் பெருமானின் திருவடியே தம் மணிமுடியாக வழிபட்டவர்.

40. பொய்யடிமையில்லாத புலவர்: கடைச் சங்ககாலப் புலவர் நாற்பத்தொன்பதின்மர்.

41. புகழ்ச்சோழ நாயனார்: தாம் வெட்டிய பகையரசர்களின் தலையொன்று சடைமுடி தரித்திருப்பதை அறிந்து மனம் நொந்து தீப்புகுந்தவர்.

42. நரசிங்கமுனையரைய நாயனார்: போலிச் சிவனடியாரிடமும் அன்பு காட்டிய பெருந்தகையார்.

43. அதிபத்த நாயனார்: நாடோறும் தம் வலையில் அகப்படும முதல் மீனை இறைவனுக்குப் படைத்தவர்.

44. கலிக்கம்ப நாயனார்: சிவவேடங்கொண்ட பணியாளனையும் வழிபட்டவர்.

45. கலிய நாயனார்: எண்ணையும் விறகும் இல்லாத போது தலையயிரையும் எரித்துக் கோயிலில் ஒளியுண்டாக்கியவர்

46. சத்தி நாயனார்: சிவனடியார்களை இகழ்ந்தவர் நாவைத் தண்டாயம் என்னும் குறடுபோலும் கருவியால் இழுத்துக் கத்தியால் அரிந்தவர்.

47. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்: ஆட்சியைத் துறந்து சிவத்தலங்களை வழிபட்டு 'க்ஷேத்திரத் திருவெண்பா' என்னும் நூலை இயற்றியவர்.

48. கணம்புல்ல நாயனார்: கணம்புல்லை விற்றுத் தீபத் திருப்பணி புரிந்தவர்

49. காரி நாயனார்: 'காரிக்கோவை' என்னும் நூல் இயற்றி அதன் ஊதியத்தைக் கொண்டு தமிழ்ப்பணி புரிந்தவர்

50. நிறைசீர் நெடுமாற நாயனார்: சமண சமயத்தவராக இருந்து திருஞானசம்மந்தரால் சைவ சமயத்துக்குத் திரும்பப் பெற்றவர்.

51. வாயிலார் நாயனார்: சிவபெருமானுக்கு மனத்தினுலேயே திருக்கோயில் அமைத்து திருமஞ்சனம், தூபதீபம் செய்து வந்தவர்.

52. முனையடுவார் நாயனார்: பகைவர்களை வென்று திரட்டிய பொருளை அடியார்களுக்கு வழங்கியவர்.

53. கழற்சிங்க நாயனார்: பூமண்டபத்தின் கீழே இருந்த மலரை முகர்ந்து பார்த்த தம் மனைவியாரின் கையை வெட்டியவர். பல்லவ மன்னர்.

54. இடங்கழி நாயனார்: தம் செல்வத்தையும் அம்பாரத்தையும் சிவனடியார்கள் கொள்ளை கொள்ள விட்டுவிட்ட ஒரு குறுநில மன்னர்.

55. செருத்துணை நாயனார்: கழற்சிங்கரின் மனைவி பூமண்டபத்திலிருந்த மலரை முகர்ந்து பார்த்ததால் அவ்வம்மையாரின் மூக்கையறுத்தவர்.

56. புகழ்த்துணை நாயனார்: சிவபெருமான் திருவருளால் பஞ்சத்தில் நாடோறும் ஒவ்வொரு பொற்காசு பெற்றவர்.

57. கோட்புலி நாயனார்: சிவபெருமானுக்குப் படைப்பதற்காகத் தாம் சேமித்து வைத்த நெல்லை உண்ட சுற்றத்தினரைக் கொன்று நேர்மையை நிலைநாட்டியவர்.

58. பத்தராய்ப் பணிவார்: திருவாரூரில் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபட்ட தொகையடியார்கள்.

59. பரமனையே பாடுவார்: சிவபெருமானையே பொருளாகப் பாடுபவர்கள்.

60. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்: சிவயோக நெறியில் சித்தத்தை வைத்து முத்தியடைந்தவர்கள்.

61. திருவாரூர்ப் பிறந்தார்: திருக்கயிலாயத்தில் உள்ள சிவகணங்களே இவர்கள்.

62. முப்போதும் திருமேனி தீண்டுவார்: மூன்று காலங்களிலும் சிவபெருமானை அர்ச்சிப்பவர்கள்.

63. முழுநீறு பூசிய முனிவர்: உடல் முழுவதும் திருநீறு பூசியவர்கள்.

64. அப்பாலும் அடிச்சார்ந்தார்: முத்தமிழ் நாடுகளுக்கு அப்பால் உள்ள நாடுகளில் வாழ்ந்த சிவனடியார்கள்.

5. பூசலார் நாயனார்: மனக்கோயில் கட்டிச் சிவபெருமானை பிரதிட்டை செய்தவர்.

66. மங்கையர்க்கரசியார்: நின்றசீர் நெடுமாறனாரின் மனைவியார்; திருஞானசம்பந்தரை மதுரைக்கு வரவேற்றுத் தம் கணவனாரைச் சைவராக்கினவர்.

67. நேச நாயனார்: சிவனடியார்களுக்கு உடை, கோவணம், கீள் முதலியன கொடுத்துக் காத்தவர்.

68. கோசெங்கட் சோழ நாயனார்: திருவானைக்கா திருமதில் பணிகளைச் செய்தவர்.

69. திருநீலகண்ட யாழ்ப்பாணர். திருஞானசம்மந்தரின் பாடல்களை யாழில் அமைத்துப் பாடியவர்.

70. சடைய நாயனார்: சுந்தரரின் தந்தையார்

71. இசை ஞானியார்: சுந்தரரின் அன்னையார்

72. சுந்தரமூர்த்தி நாயனார்: சடையனார், இசை ஞானியார் ஆகியோரின் மைந்தர்; சிவபெருமான் தோழர்; தேவாரம் பாடிச் செந்தமிழ் வளர்த்தவர்.

உ

சிவசிவ

திருச்சிற்றம்பலம்

# திருத்தொண்டர் புராணசாரம்

[மூலமும் கதைச்சுருக்கமும்]

## நூல் வந்தவழி

### ஆசிரிய விருத்தம்

மல்குபுகழ் வன்றொண்டர் அருளால் ஈந்த
வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை
நல்கும்வகை புல்கும்வகை நம்பி யாண்டார்
நம்பிதிரு அந்தாதி நவின்ற வாற்றால்
பல்குநெறித் தொண்டர்சீர் பரவ வல்ல
பான்மையார் எமையாளும் பரிவால் வைத்த
செல்வமிகும் திருத்தொண்டர் புராண மேவும்
திருந்துபயன் அடியேனும் செப்ப லுற்றேன். 1

கதைச் சுருக்கம்

புகழ் பொருந்திய வன்றொண்டர் எனப்பெற்ற சுந்தர மூர்த்தி நாயனார் சிவபெருமான் திருவருளினால் அருளிச் செய்தது. 'திருத்தொண்டத் தொகை' என்னும் திருப் பதிகம். இதன் மெய்ப்பொருள் உலகத்தில் நிலைபெற்று விளங்கும் பொருட்டு நம்பியாண்டார் நம்பி என்னும் சிவ வேதியர் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவரு ளினால் ''திருத்தொண்டர் திருவந்தாதி''யாக வகைப்படுத்தி னார். அம்முறைப்படியே திருத்தொண்டர்களின் புகழைத் துதிக்க வல்லவராகிய சேக்கிழார் பெருமான் விரிவாகப் பாடியருளியது. திருவருட்செல்வம் நிறைந்த ''திருத்தொண்

டர் புராணம்'' என்னும் பெரிய புராணம் ஆகும். அதன்கண் அமைந்துள்ள பயனாகிய சாரத்தை அடியேனும் சொல்லத் தொடங்கினேன்.

## 1. சுந்தரமூர்த்தி நாயனார்

### ஆடி மீ சுவாதி நட்சத்திரம்

தண்கயிலையது நீங்கி நாவ லூர்வாழ்
சைவனார் சடையனார் தனயனாராய்
மண்புகழ அருட்டுறையான் ஓலைகாட்டி
மணம்விலக்க வன்றொண்டர் அதிகை சேர்ந்து
நண்பினுடன் அருள்புரிய ஆரூர் மேவி
நலங்கிளரும் பரவைதோள் நயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்தும்
திருத்தொண்டத் தொகையருளால் செப்பி னாரே. 2

செப்பலரும் குண்டையூர் நெல்ல ழைத்துத்
திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச் செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருள்ஆற் றிட்டுத்
தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பில்தனித் தூதுவந்(து)ஆ றாடுகீறி
உறுமுதலை சிறுமதலை உமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி அருளால் சேர
வேந்தருடன் வடகயிலை மேவினாரே. 3

கதைச் சுருக்கம்:

திருக்கயிலையில் சிவபெருமானுக்குப் புஷ்பத் திருத்தொண்டு செய்து கொண்டிருந்தவர், ஆலால சுந்தரர். இவர் திருக்கயிலாயத்தினின்றும் நீங்கித் திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூரில் வாழ்ந்திருந்த ஆதிசைவப் பிராமணராகிய சடையனாருக்கும் இசைஞானிக்கும் குமார

ராய் அவதரித்தார்; நம்பியாரூரர் என்னும் திருப்பெயர் பெற்று வளர்ந்து வரலானார்; சகலகலைகளையும் கற்றார்; மணப்பருவத்தை அடைந்தார். பெற்றோர்கள் திருநாவலூருக்கு அடுத்த புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் மகளை மணம் பேசி நம்பியாரூரருக்குத் திருமணச்சடங்குகளை முடித்தார்கள். சிவபெருமான் சுந்தரரை தடுத்தாட் கொள்ளும் பொருட்டு ஒரு கிழப் பிராமண வடிவங் கொண்டு வந்து சுந்தரர் முன் நின்று, முறிச்சீட்டை பலர் முன் காட்டி, 'இவன் எமக்கு அடிமை' என்று வழக்கிட்டு, மணத்தைத் தவிர்த்துத் திருவெண்ணெய் நல்லூரில் வழக்கை முடிக்க அழைத்துக் கொண்டுபோய் நல்லூர் அருட்டுறை ஆலயத்துள் மறைந்து இடப வாகனத்தின்மீது இருந்து காட்சியளித்து, 'நீ முன்னமே நமக்குத் தொண்டன்; நீ என்பால் வன்சொல் கூறினை; அதனால் வன்றொண்டன் எனப் பெயர்பெறுவாய்; இன்று நம்மைப் 'பித்தா' என்றதையே முதலாகக் கொண்டு நீ பாடக்கடவை' என்று அருள் செய்ய, வன்றொண்டர் அவ்வாறே பாடி வணங்கினார் பின்பு வன்றொண்டர் திருவதிகை அடையச் சிவபெருமான் அவருக்குத் திருவடி சூட்டியருளினார். பின்பு திருவாரூரை அடைந்தார்; இறைவனுடன் தோழமை கொண்டார். சுந்தரர் தியாகேசர் துணைக் கொண்டு பரவையார் என்பவரைத் திருமணஞ் செய்து கொண்டு தியாகேசரை வணங்கி வரலானார்; அப்போது விறன்மிண்ட நாயனாரின் மெய்யன்பைக் கண்டு சிவனடியார்களைத் துதிக்கும் 'திருத்தொண்டத் தொகை' என்னும் திருப்பதிகத்தைச் சிவபெருமான் திருவருளால் அருளிச்செய்து சிவனடியார்களை வணங்கிச் சென்றார்.

பின்னர்க் குண்டையூரிலுள்ள நெற்குவையைத் திருவாரூரில் பரவையார் திருமனைக்கு இறைவனை வேண்டி அழைப்பித்தார். திருப்புகலூரில் செங்கல்லைப் பொன்னாகச் செய்தார்; திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்தில் சிவபெருமான் கொடுத்தருளிய பொருளை (பொன்னை) மணிமுத்தாநதியி

லிட்டுத் திருவாரூர்க் கமலாலயம் என்னும் தடாகத்தில் தேடி எடுத்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் இருந்தார். அதன் பின்னர் நம்பியாரூரர் திருவொற்றியூரை அடைந்தார். அங்குச் சிவபக்தியுடன் திருவொற்றியூர்ச் சிவாலயத்தில் சங்கிலியார் புட்பத் திருத்தொண்டு புரிந்து கொண்டிருக்கச் சுந்தரர் கண்டு விருப்புற்று மகிழமரத்தடியில் இறைவன் முன்னிலையில் 'பிரியேன்' என்று சபதம் செய்து கொடுத்துச் சங்கிலியாரைத் திருமணம் புரிந்து கொண்டு சிலகாலம் வாழ்ந்தார்; தியாகேசரின் வசந்த விழாவை தரிசிக்க எண்ணித் திருவாரூர் அடைந்தார்.

சுந்தரர் சங்கிலியாரை மணந்ததை அறிந்த பரவையார் பிணக்குக்கொண்டார். சுந்தரர் சிவபெருமானைத் தூது அனுப்பிப் பரவையாரின் ஊடலை நீக்கி மகிழ்ச்சியுடன் இருந்தார். ஒரு சமயம் திருவையாற்றுக்குக் காவிரி நதியின் வெள்ளம் வழிவிடும்படி செய்து மலைநாட்டிற்கு எழுந்தருளினார்; வழியில் அவிநாசி என்னும் திருப்பதியில் முதலையுண்ட பாலனை மீட்டுக் கொடுத்து மலைநாட்டினை அடைந்தார்; சேரர் பெருமான் எதிர்கொண்டு அழைத்து உபசரிக்க இருந்தார். அப்போது சிவபெருமான் உத்தரவுப்படி வெள்ளையானை திருவஞ்சைக்களத்துக்குவரச் சுந்தரர் அதில் ஏறித் திருக்கயிலை அடைந்தார். சேரமான் பெருமான் நாயனாரும் குதிரை மீது எழுந்தருளிச் சுந்தரருடன் திருக்கயிலாயம் சென்றார்.

## 2. தில்லைவாழந்தணர்

### சித்திரை மீ ஆண்டு முதல் நாள்

நல்லவா னவர்போற்றும் தில்லை மன்றுள்
நாடகஞ்செய் பெருமானுக்கு அணியார் நற்பொன்
தொல்லைவான் பணியெடுத்தற்கு உரியார் வீடும்
துறந்தநெறி யார்தொண்டத் தொகை முன் பாடத்

'தில்லைவா முந்தணர்' என்று எடுத்துநாதன்
செப்பும்அரு ளுடையார்முத் தீயார் பத்திக்கு
எல்லைகாண் பரியார் ஒப்பு உலகில் தாமே
ஏய்ந்துளார் எமையாள வாய்ந்து ளாரே. 4

கதைச் சுருக்கம்

தில்லைவாழந்தணர் மூவாயிரவர்கள்; தில்லைச்சிற்றம்பலத்தில் நடராசப்பெருமானுக்கு அணுக்கத் தொண்டராக இருக்கும் பேறுபெற்றவர்கள்; நாடோறும் மிக்க அன்புடன் நடராசப் பெருமானை வழிபட்டுப் பூசிப்பதே பெரும் தவமாக உடையவர்கள்; வீடுபேற்றையும் விரும்பாமல் பக்தி நெறியை கைக்கொண்டவர்கள்; சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை பாடுதற்குத் தியாராசப் பெருமான் 'தில்லைவாழந்தணர்' என்ற முதலடியை எடுத்துக்கொடுத்தருளும் திருவருளைப் பெற்றவர்கள்; ஆவகனீயம் காருகபத்தியம் தக்கிணாக்கினியம் என்னும் முத்தீயை வளர்ப்பவர்; எவராலும் அறிய முடியாத அளவு பக்தி நெறியினை உடையவர்கள்; தங்களுக்குள் நடராசப் பெருமானும் ஒருவராக இருக்கும் பேற்றினைப் பெற்றவர்கள்; தமக்குத் தாமே ஒப்பாக விளங்குபவர்கள்; ''இன்று இவர் பெருமை எம்மால் இயம்பலாம் எல்லைத் தாமோ?''

## 3. திருநீலகண்ட நாயனார்

### வைகாசி மீ மூலம் நட்சத்திரம்

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்த ராகித்
'தீண்டில் எமைத் திருநீல கண்டம்' என்று
சொல்லுமனை யாள்தனையே அன்றி மற்றும்
துடியிடையா ரிடையின்பம் துறந்து மூத்துஅங்கு
எல்லையில்ஓடு இறைவைத்து மாற்றி 'நாங்கள்
எடுத்திலம்' என்று இயம்புமென இழிந்து பொய்கை
மெல்லியலா ளுடன்மூழ்கி இளமை எய்தி
விளங்குபுலீச் சரத்தரனை மேவி னாரே.

கதை சுருக்கம்:

சிதம்பரத்தில் குயவர் குலத்தில் அவதரித்தவர் திருநீலகண்ட நாயனார். இவர் பக்தி மிகுதியினுல் இறைவனைத் 'திருநீலகண்டம் திருநீலகண்டம்' என்று சொல்லித் துதிப்பார்; அதனுல் திருநீலகண்டர் என்ற பெயரினைப் பெற்ருர். இவர் சிவனடியார்க்குத் திருவோடு அளித்தலே சிறந்த தொண்டாகக் கொண்டவர்; ஒரு நாள் இளமை காரணமாகப் பரத்தையரிடம் சென்று மீண்டார்; அதனை மனைவியார் அறிந்து ஊடி 'நீர் எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம்' என்ருர். அப்பொழுது நாயனுர் தம் மனைவியையே அன்றிப் பிறமாதர்களையும் மனத்தினும் தீண்டேன்' என்று உறுதிகொண்டு இன்பத்தை ஒழித்து வாழ்ந்து மூப்பு அடைந்தார். ஆயினும் இருவரும் அடியார் பணியில் சிறிதும் வழுவாமல் நின்ருர்கள். இதனை உலகறியும் பொருட்டுச் சிவபெருமான் சிவயோகியார் வடிவங்கொண்டு நாயனுரிடம் வந்து, ஒரு திருவோட்டைக் கொடுத்துச் சென்ருர். பின்பு சிலநாள் கழித்துச் சிவயோகியார் வந்து ஓட்டைக் கேட்கத் திருவோடு வைத்த இடத்தில் காணுமையால் வேறு புதிய வோடு தருகிறேன் என்று வேண்டினுர். சிவயோகியார் மிகக் கோபித்து, 'நீர் உமது மனைவியைக் கைப்பற்றி நீரிலே மூழ்கி நாங்கள் ஓட்டை அபகரிக்கவில்லை என்று சத்தியம் செய்து கொடுங்கள்' என்ருர். திருநீலகண்ட நாயனுர் திருப்புலீச் சரத்து எதிரிலுள்ள திருக்குளத்தில் மனைவியோடு மூழ்கி இளமைப் பருவம் அடைந்து நின்ருர். சின்னுள் உலகில் வாழ்ந்திருந்து இறைவன் திருவடியை அடைந்தார்.

## 4. இயற்பகை நாயனுர்

### மார்கழி மீ" உத்திரம் நட்சத்திரம்

எழிலாரும் காவிரிப்பூம் பட்டி னத்துள்
இயல்வணிகர் இயற்பகையார் இருவர்தேட

அழலாய பிரான்தூர்த்த மறையோ ளுகி
ஆயிழையைத் தரவேண்டி அணைய ஐயன்
கழலாரப் பணிந்துமனைக் கற்பின் மேன்மைக்
காதலியைக் கொடுத்(து) அமர்செய் கருத்தால் வந்த
பிழையாருஞ் சுற்றமெலாம் துணித்து மீளப்
பிஞ்ஞகனுர் அழைத்தருளப் பெற்று ளாரே. 6

கதைச் சுருக்கம்

காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத்தில் தோன்றிய இயற்பகை நாயனார் சிவனடியார்களுக்கு வேண்டும் பொருளை 'இல்லை' என்னுது கொடுத்து வாழ்ந்து வந்தார். ஒருநாள் சிவபெருமான், நாயனுரின் அன்பை அறியக் காமுக வேதியர் திருவுருக் கொண்டு வந்து, ''இல்லையென்னுது கொடுக்கும் இயற்பகையாரே! நாம் உன்னுடைய மனைவியைப்பெற விரும்பி வந்துள்ளோம்'' என்றபோது நாயனுர் அவர் திருவடிகளில் வணங்கித் தம் மனைவியை அவர்க்குக் கொடுத்து அனுப்பினுர். அப்பொழுது நாயனாரின் உறவினர் வந்து காமுகவேதியரைத் தடுத்து எதிர்க்க, அவர்களையெல்லாம் நாயனார் வாளால் வெட்டி வேதியரை வழியனுப்பிவிட்டு, வீட்டிற்குத் திரும்புகையில் வேதியராகிய இறைவர், ''இயற்பகை முனிவர்! ஓலம்! நீ இங்கே வருவாய் ஓலம்!'' என்று சொல்லி ஓலமிட்டு அழைத்தார். நாயனார் 'இதோ வந்தேன், என்று திரும்புமுன் வேதியர் மறைந்தார். பின்பு சிவபெருமான் இடபாரூடராகக் காட்சியளித்து நாயனாருக்கும் அவர் மனைவியாருக்கும் இறந்த உறவினர்க்கும் வீடு பேற்றை அருளினார்.

## 5. இளையான்குடிமாற நாயனுர்
### ஆவணி மீ மகம் நட்சத்திரம்

மன்னியவே ளாண்தொன்மை இளைசை மாறர்
வறுமையால் உண்வுமிக மறந்து வைகி

உன்னருநள் ளிருள் மழையில் உண்டி வேண்டி
உம்பர்பிரான் அணையவயல் உழுது வித்தும்
செந்நெல்முளை அமுதுமனை அலக்கா லாக்கிச்
சிறுபயிரின் கறியமுது திருந்தச் செய்து
பன்னலரும் உணவுஅருந்தற்கு எழுந்த சோதிப்
பரலோக முழுதாண்ட பான்மையாரே. 7

கதைச் சுருக்கம்

இளையான்குடி என்னும் ஊரிலே வேளாளர் மரபில் அவதரித்த மாறர் என்பவர் உழுதொழிலால் செல்வம் படைத்தவர்; சிவபெருமானிடத்து அன்பு உடையவர்; சிவனடியார்களை வழிபட்டு அறுசுவை உண்டிகளை வழங்குபவர். இவர்க்குச் செல்வம் சிறிது சிறிதாகச் சுருங்கியது. ஆயினும் சிவனடியார்களை உபசரிக்கும் மனநிலை சுருங்காமல் இருந்தார். ஒருநாள் முழுமையும் விடாமழை பெய்து கொண்டிருந்தது. அன்று நாயனார் வீட்டில் உணவுப்பொருள் இன்மையால் நாயனாரும், அவர் மனைவியாரும் கடும்பசியுடன் இரவில் நித்திரை இன்றித் தெருக்கதவை அடைத்துத் தாளிட்டு இருந்தனர். நள்ளிரவில் சிவபெருமான் அடியார் வேடம் பூண்டு இளையான்குடி மாறர் வீட்டிற்கு வந்து 'மிகுந்த பசியாய் இருக்கிறது; அன்னமிடல் வேண்டும்' என்றார். உடனே மாறனார் சிவனடியாரை இருக்கச் செய்து அன்று பகலில் வயலில் உழுது விதைத்த செந்நெல்லின் முளைகளை அள்ளிக் கொண்டுவந்து மனைவி கையில் கொடுத்தார். வீட்டுக் கூரை அலக்குகளைப் பிடுங்கி அடுப்புக்கு அளித்தார். மனைவியார் திருவமுது ஆக்கினார்; கொல்லையில் முளைத்த கீரையைக் கறி சமைத்தார். உறங்குவது போலப் படுத்திருந்த பெருமானை நாயனார் எழுப்பி, 'சுவாமீ, திருவமுது செய்தருள வேண்டும்' என்று வேண்டினார். உடனே சிவபெருமான் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றிக் காட்சி அளித்துச் சிவலோக பதவியைக் கொடுத்து ஆட்கொண்டருளினார்.

# 6. மெய்ப்பொருள் நாயனுர்

கார்த்திகை மீ" உத்திரம் நட்சத்திரம்

சேதியர்நற் கோவலூர் மலாட மன்னர்
திருவேடம் மெய்பொருளாத் தெளிநத சிந்தை
நீதியினா ருடன் பொருது தோற்ற மாற்ருன
நெடுஞ்சினமுங் கொடும்படையும் நிகழா வண்ணம்
மாதவர்போல் ஒருமுறைகொண்டு அணுகி வாளால்
வன்மைபுரிந் திடமருண்டு வந்த தத்தன்
காதலுற 'நமர்தத்தா!' என்று நோக்கிக்
கடிதகல்வித்து இறைவனடி கைக்கொண் டாரே.

கதைச் சுருக்கம்:

சேதி நாட்டின் தலைநகரமான திருக்கோவலூரிலே மலையமான் நாட்டாரின் மரபினைச் சார்ந்த மன்னராய் வாழ்ந்து வந்தவர், மெய்ப்பொருள் நாயனார் ஆவர். இவர் சிவனடியார்களின் திருவேடத்தையே மெய்ப்பொருள் என்று கருதி வழிபட்டு வந்தவர். இவர் மீது முத்தநாதன் என்ற ஒரு அரசன் பகைகொண்டு பலமுறை எதிர்த்துத் தோல்வி யுற்ருன்; பின்பு வஞ்சனையால் இவரை வெல்ல எண்ணித் தனது கடுங்கோபத்தை வெளிக்காட்டாமல் சிவனடியார் வேடம் பூண்டு உடைவாளைப் புத்தகக் கவளியில் வைத்து மறைத்துக் கொண்டு மெய்ப்பொருள் நாயனுர் அரண் மனையை அடைந்தான்; பின்பு, நாயனாரைக் கண்டு, 'சிவாகம நூல் உமக்கு உபதேசிக்கக் கொண்டு வந்தேன்' என்ற போது நாயனார் அருள் செய்யும்' என்று வணங்க, வஞ்சகனாகிய முத்தநாதன் ''முன்னே தான் நினைத்த அக்கொடிய செயலைச் செய்து முடித்தான்'' முத்தநாதன் செயலை அறிந்த தத்தன் என்னும் காவலன் அவனை வாளால் வெட்டப் போகக், கொலையுண்ட நாயனார்,

''தத்தா இவர் நம்மவர்''; ஒன்றும் செய்யற்க'' என்று தடுத்து ''இவரை நகருக்கு வெளியே இடையூறு இன்றி விடுத்து வாரும்'' என்று கூறி வீழ்ந்தார். அவனும் அங்ஙனமே செய்தான். பின்னர் மெய்ப்பொருள் நாயனார் தாம் திருநீற்றின்மீது வைத்த அன்பைப் பாதுகாக்கும்படி யாவர்க்கும் எடுத்துக்கூறி நடராச மூர்த்தியைத் துதித்து சிவப் பேற்றை அடைந்தார்.

## 7. விறன்மிண்ட நாயனார்

சித்திரை மீ" திருவாதிரை நட்சத்திரம்

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண் தொன்மை
விறன்மிண்டர் திருவாரூர் மேவு நாளில்
வளங்குலவு தொண்டரடி வணங்கா தேகும்
வன்றெண்டன் புறகுஅவனை வலிய ஆண்ட
துளங்குசடை முடியோனும் புற(கு) என்(று) அன்பால்
சொல்லுதலும் அவர் தொண்டத்தொகை முன் பாட
உளங்குளிர 'உளது' என்றூர் அதனால் அண்ணல்
உவகைதர உயர்கணத்துள் ஓங்கினாரே. 9

கதைச் சுருக்கம்:

மலைநாட்டிலே புகழ் விளங்கும் செங்குன்றூரில் வேளாளர் மரபில் விறன்மிண்ட நாயனார் என்ற ஒருவர் வாழ்ந்து வந்தார். ஒருசமயம் இவர் திருவாரூரை அடைந்து தியாக ராசப் பெருமானை வழிபட்டுக்கொண்டு தேவாசிரிய மண்டபத்தில் இருந்தார். ஒருநாள் சுந்தரமூர்த்தி நாயனார் அங்கு இருந்த திருத்தொண்டர்களை வணங்காமல் வீதிவிடங்கப் பெருமானைத் தரிசிக்கத் திருக்கோயிலுக்குள் ஒதுங்கிச் செல்வதை விறன்மிண்ட நாயனார் கண்டு மனம் வருந்தி, ''இவ்வன்றெண்டன் அடியார்களுக்குப் புறம்பு'' என்று கூறினார். சுந்தரமூர்த்தி நாயனார் உடனே திருத்தொண்டத்

தொகை என்னும் திருப்பதிகம் பாடித் திருத்தொண்டரை வழிபட்டார். விறன்மிண்ட நாயனார் அதனைக் கேட்டு 'உளங்குளிர உளது' என்று மகிழ்ந்தார். சிவபெருமான் திருவருளின் துணையால் விறன்மிண்ட நாயனார் சிவகணத்துள் ஒருவராக இருக்கும் பேறு பெற்றார்.

## 8. அமர்நீதி நாயனார்

### ஆனி மீ   பூரம் நட்சத்திரம்

பழையாறை வணிகர் அமர்நீதியார் பால்
  பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலும் நல்லூர்க்
குழைகாதர் வந்(து) ஒருகோவணத்தை வைத்துக்
  கொடுத்ததனை எடுத்தொளித்துக் குளித்து வந்து
தொழிலாரும் அதுவேண்டி வெகுண்டு நீர்இத்
  துலையிலிடுங் கோவணநேர் தூக்கும் என்ன
எழிலாரும் பொன்மனைவி இளஞ்சேய் ஏற்றி
  ஏறினர்வா னுலகுதொழ ஏறினாரே. 10

கதைச் சுருக்கம்:

சோழ நாட்டிலே பழையாறை என்னும் பழம்பதியில் வணிகர் குலத்தில் அமர்நீதியார் என்ற ஒருவர் அவதரித்தார். அவர் வாணிகத்தால் பெருஞ்செல்வம் படைத்தவர்; சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்து, அவரவர் குறிப்பறிந்து போர்வையும், அரைஞாணும், கோவணமும் அளிக்கும் தொண்டு பூண்டவர். ஒரு சமயம் நல்லூர்ச் சிவபெருமான் அமர்நீதி நாயனாரின் பக்தியைச் சோதிக்கும் பொருட்டு அந்தணர் குலத்துப் பிரமசாரி வடிவத்தில் அமர்நீதி நாயனாரிடம் வந்தார்; கைத்தண்டிலிருந்த ஒரு கோவணத்தை நாயனாரிடம் அவிழ்த்துக் கொடுத்து நீராடச் சென்றார். நாயனார் அதனை வாங்கி வைத்திருக்க அது நாயனாருக்குத்

தெரியாமல் மறைந்தது. பின்னர் 'நாம் கொடுத்த கோவணத்தைத் தாரும்' என்று பிரமசாரி கேட்க, அமர்நீதி நாயனார் அது வைத்த இடத்தில் காணுமையால் திகைத் தார்; உடனே பிரமசாரி மிக்ககோபங்கொண்டு 'நான் முன் கொடுத்த கோவணத்திற்கு ஒத்த மற்ருெரு கோவணம் என்னிடம் உள்ளது; அதற்கு ஒத்த நிறையுள்ள கோவணம் உன்பால் உளதாயின் கொடுத்தால் போதும்' என்ருர். அதன் படி தராசில் தம்பால் இருந்த கோவணங்களையும், பொன் முதலிய பொருள்களையும் இட, நிறை இல்லாமையால் பின்பு மனைவியும், குழந்தையும், தாமும் தராசுத் தட்டில் ஏறினார். பின்னர் வானுலகு தொழச் சிவலோகம் அடைந்தனர்.

## 9. எறிபத்த நாயனார்

### மாசி மீ˚ அஸ்தம் நட்சத்திரம்

திருமருவு கருவூர் ஆனிலையார் சாத்தும்
சிவகாமி யார்மலரைச் சிந்த யானை
அரனெறியோர் எறிபத்தர் பாக ரோடும்
அறஎறிய என்னுயிரும் அகற்றீர் என்று
புரவலனுர் கொடுத்தபடை அன்பால் வாங்கிப்
புரிந்துஅரிவான் புகஎழுந்த புனித வாக்கால்
கரியினுடன் விழுந்தாரும் எழுந்தார் தாமும்
கணநாத ரதுகாவல் கைக்கொண் டாரே. 11

கதைச் சுருக்கம்:

கொங்கு நாட்டிலுள்ள கருவூரில் திருஆனிலை என்னும் திருக்கோயில் ஒன்று உள்ளது. அங்குச் சிவபெருமானை வழிபடும் எறிபத்தநாயனார் என்ற ஒருவர் இருந்தார். அவர் சிவனடியார்களுக்கு நேரும் துன்பங்களைப் போக்கும் பொழுது மழுவை (கோடரியை)த் தாங்கி நிற்பவர். திருவானிலை

ஆலயத்தில் சிவகாமியாண்டார் என்னும் முதிய அந்தணர் ஒருவர் நாள்தோறும் மலர் பறித்து மாலை தொடுத்துச் சாத்தும் திருத்தொண்டு பூண்டவர். அவர் ஒருநாள் திருக் கோயிலுக்குச் சென்று கொண்டிருந்த பொழுது புகழ்ச் சோழ நாயனாரது யானை மதங்கொண்டு சிவகாமியாண்டார் கொண்டு சென்ற திருப்பூங்கூடையைப் பறித்தெறிந்து சென்றது. சிவகாமியாண்டார் 'சிவதா சிவதா' என்று ஓலமிட்டு அரற் றினார். எறிபத்த நாயனார் அதனைக் கேட்டுக் கோபித்து அந்த யானையைப் பாகரோடு மழுவால் வெட்டிக் கொன்ருர். உண்மையை அறிந்த அரசன் ''ஐயனே இக்குற்றத்திற்கு இங்கு அடியேனையும் கொல்ல வேண்டும்'' என்று உடை வாளை எடுத்துக் கையில் கொடுத்தான். அரசனின் பேரன்பைக் கண்ட நாயனார் உடைவாளால் தமது கழுத்தை அறுத்துக் கொள்ள முற்பட்டார். அதுகண்ட அரசன் மனம் பதைத்து நாயனார் கையைப் பிடித்துத் தடுத்தான். அப்பொழுது ''அன்புடையீர்! உங்கள் தொண்டின் பெருமையை உலகறி யும் பொருட்டு யானை மலர்களைச் சிந்தியது'' என்று ஓாசரீரி வாக்கு ஆகாயத்தில் எழுந்தது; இறந்து கிடந்த பாகர்களோடு யானையும் உயிர்பெற்று எழுந்தது. எறிபத்த நாயனார் பக்தியின் சிறப்பால் திருக்கயிலாயத்தில் சிவ கணங்களுக்குத் தலைமை தாங்கும் பேறு பெற்ருர்.

## 10. ஏனாதிநாத நாயனார்

### புரட்டாசி மீ உத்திராடம் நட்சத்திரம்

ஈழக் குலச்சான்ருர் எயின னூர்வாழ்
 ஏனாதி நாதனார் இறைவன் நீற்றைத்
தாழத் தொழுமரபார் படைகள் ஆற்றும்
 தன்மைபெரு அதிசூரன் சமரில் தோற்று

வாழத் திருநீறு சாத்தக் கண்டு
மருண்டார் தெருண்டார்கை வாள்வி டார்நேர்
வீழக் களிப்பார்போல் நின்றே யாக்கை
விடுவித்துச் சிவனருளே மேவி ஞரே. 12

கதைச் சுருக்கம்:

ஏனாதி நாதர் எயினனூரில் தோன்றியவர்; ஈழக்குலத் தவர்; திருநீற்றினடத்துப் பேரன்பு பூண்டவர். இவர்க்கு அதிசூரன் என்று ஒரு பகைவன் இருந்தான். இருவரும் வாள் வித்தைப் பயிற்றுவிப்பவர்களே. அதிசூரன் அழுக்காறு அடைந்து ஏனாதி நாதரோடு பொருது தோற்ருன்; மறுநாள் திருநீறு அணிந்து போருக்கு வந்தான். திருநீற்றைக் கண் டதும் ஏனாதி நாதர் மருண்டார்; நிராயுதரைக் கொன்ருர் எனும் தீமை அதிசூரனுக்கு ஏய்தக்கூடாது என்று தெருண் டார்; தனது கைவாளைக் கீழே நழுவ விடவில்லை; போர் செய்வார் போல் எதிர்த்து நின்றார். அதிசூரனும் தான் நினைத்தவாறே ஏனாதிநாதரைக் கொன்ருன். ஏனாதிநாதர் சிவனருள் பெற்ருர்.

## 11. கண்ணப்ப நாயனார்

### தை மீ மிருகசீரடம் நட்சத்திரம்

வேடரதி பதிஉடுப்பூர் வேந்தன் நாகன்
விளங்கியசேய் திண்ணனார் கன்னிவேட்டைக்
காடதில்வாய் மஞ்சனமும் குஞ்சிதரு மலரும்
காய்ச்சினமென் றிடுதசையும் காளத்தி யார்க்குத்
தேடருமன் பினில்ஆறு தினத்தளவும் அளிப்பச்
சீறுசிவ கோசரியும் தெளியவிழிப் புண்ணீர்
ஓடவொரு கண் அப்பி ‘ஒருகண் அப்ப!
ஒழிக’வெனும் அருள்கொடரு(கு) உறநின் ருரே. 13

கதைச் சுருக்கம்:

நாகன் என்பவன் வேடர்களுக்கு அதிபதி; உடுப்பூர் என்ற ஊருக்குத் தலைவன். அவனுக்குத் திருமகனாகக் கிடைத்தார் திண்ணனார். அவர் விற்பயிற்சிக்குரிய பருவம் அடைந்தார். முதன்முதலில் வேட்டையாடுவதற்குக் காடு சென்றார். ஒரு பன்றியைக் கொன்றார்; நாணன் காடன் என்பவரோடு பொன்முகலியை அடைந்தார்; மலைநோக்கிச் சென்றார்; மகாதேவரைக் கண்டார்; இறைவற்கு அமுது செய்விக்க நினைத்தார். வாயிலே நீர் முகந்து கொண்டார்; மலர்களைக் குடுமியில் செருகிக்கொண்டார்; தசையைக் காய்ச்சிச் சுவைத்து நல்ல சுவையுள்ள தசைகளை எடுத்துக் கொண்டார்; காளத்தியார்க்குப் படைத்தார்; இவ்வண்ணம் ஐந்து நாட்கள் முடிந்தன. சிவகோசரியார் என்ற அந்தணர் இந்த அனுசிதத்தைக் கண்டார்; யார் செய்தது என்று தெரியாது திகைத்தார்; இறைவன் ஏவலால் மறைந்திருந் தார். ஆறும்நாள் திண்ணனார் வந்தார்; இறைவனின் திருக்கண் ஒன்றில் குருதி வழிவதைக் கண்டார்; தன் ஒரு கண் அப்பினார். குருதி நின்றது. இன்னொரு கண்ணில் குருதி வந்தது. இன்னொரு கண்ணைத் தோண்ட அம்பை ஊன்றினார். இறைவன் 'நில்லு கண்ணப்ப!' என்றருளித் தன் வலப்பக்கத்தில் இருக்குமாறு அருள் புரிந்தார்!

## 12. குங்குலியக்கலய நாயனார்

### ஆவணி மீ மூலம் நட்சத்திரம்

சிலமலி திருக்கடவூர்க் கலயனாராம்
திகழ்மறையோர் பணிவறுமை சிதையா முன்னே
தாலியைநெற் கொளஎன்று வாங்கிக் கொண்டு
சங்கையில்குங் குலியத்தால் சார்ந்த செல்வர்

ஞாலநிகழ் திருப்பனந்தாள் நாதர் நேரே
நரபதியும் தொழக்கச்சால் நயந்து போதப்
பாலமுதம் உண்டாரும் அரசும்எய்திப்
பரிந்துஅமுது செயஅருள்சேர் பான்மை யாரே. 14

கதைச் சுருக்கம்:

திருக்கடவூரில் கலயனார் என்ற நாயனார் இருந்தார். அவர் மறையவர்; திருக்கோயிலில் குங்குலியத்தூபம் இடுவதாகிய திருத்தொண்டு செய்கையில் வறுமையுற்ருர். நெல் வாங்கக் கொணர்ந்த திருமங்கிலியமும் விற்றுக் குங்குலியத் தொண்டு புரிந்து இறைவன் அருளால் நிறைந்த செல்வம் அடையப்பெற்ருர். திருப்பனந்தாளில் சாய்ந்திருந்த சிவலிங்கத் திருமேனியை நிமிர்க்கச் சோழ அரசன் முயன்ருன்; முடியவில்லை. அச்சோழ அரசனும் வணங்குமாறு, இறைவனை நாயனார் நிமிரச் செய்தார். பின்னர்த் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் திருகடவூர்க்கு வர அவ்விருவர்க்கும் திருவமுது செய்வித்துப் பேறுபெற்ருர்.

## 13. மானக்கஞ்சாற நாயனார்

மார்கழி மீ˚ சுவாதி நட்சத்திரம்

கஞ்சநகர் மானக்கஞ்சாற னார்சீர்க்
காதல்மகள் வதுவைமணங் காணநாதன்
வஞ்சமலி மாவிரதத் தலைவனாகி
வந்துபுகுந்து அவள்அளகம் மகிழ்ந்து நோக்கிப்
பஞ்சவடிக் காம்என்ன அரிந்து நீட்டும்
பத்தர்எதிர் மறைந்து இறைவன் பணித்த வாக்கால்
எஞ்சலில்வண் குழல்பெற்ற பேதை மாதை
ஏயர்பிராற்கு உதவிஅருள் எய்தினாரே. 15

கதைச் சுருக்கம்:

கஞ்சாறு என்ற தலத்தில் தோன்றியவர், மானக் கஞ்சாறர். அவர்க்குத் திருவருளால் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவளை ஏயர்கோன் கலிக்காமருக்குத் திருமணம் செய்விக்க நினைத்தார். இறைவன் மாவிரதர் கோலம் பூண்டு வந்தார்; நாயனாரின் மகளின் கூந்தலை மகிழ்ந்து நோக்கினார்; தமது பஞ்சவடிக்கு இக்கூந்தல் உதவக்கூடும் என்று நாயனாரிடம் கூறினார். உடனே நாயனார் உடைவாளால் கூந்தலை அரிந்து கொடுத்தார். இறைவன் மறைந்தருளினார். அவரது திருவருளால் கூந்தலும் முன்போல் வளர்ந்தது. பின்பு, ஏயர்க்கோன் கலிக்காம நாயனார்க்குத் தம் மகளைத் திருமணம் செய்வித்துச் சிவபெருமானின் திருவருளைப் பெற்றார்.

## 14. அரிவாட்டாய நாயனார்

### தை மீ திருவாதிரை நட்சத்திரம்

தாவில் கணமங்கலத்துள் வேளாண் தொன்மைத்
    தாயனார் நாயனார் தமக்கே செந்நெல்
தூவரிசி எனவிளைவது அவையே ஆகத்
    துறத்துணவு வடுஅரிசி துளங்கு கீரை
ஆவினில்ஐந் துடன்கொணரக் கமரில் சிந்த
    அழிந்தரிவாள் கொண்டுஊட்டி அரியா முன்னே
மாவடுவின் ஒலியும் அரன் கரமுந் தோன்றி
    வாள்விலக்கி அமரர்தொழ வைத்தது அன்றே.

கதைச் சுருக்கம்:

கணமங்கலம் என்ற பதியுள் வேளாளர் குலத்துள் தோன்றியவர் தாயனார் என்பவர். அவர் செந்நெல் அரிசி, செங்

கீரை, மாவடு ஆகிய இவற்றைச் சிவபெருமானுக்குத் திருவமுது செய்விப்பார். எங்கும் செந்நெல்லே விளைந்தது. செந்நெல் முழுவதும் இறைவற்கே அளித்து நாயனார் பட்டினி கிடந்தார். ஒரு நாள் அமுது செய்விக்கச் செந்நெல் அரிசியும், செங்கீரையும், மாவடுவும், ஆவினில் ஐந்தும் சுமந்து செல்லுகையில் பசியால் மெலிந்த நாயனார் கீழே விழுந்தார்; யாவும் கமரில் (நிலவெடிப்பில்) வீழ்ந்தன. மனம் வருந்திய நாயனார் அரிவாள்கொண்டு தன் ஊட்டியை அறுக்கலானார். இறைவர் மாவடுவைக் கடிக்கும் ஓசை கேட்டது; இறைவரது திருக்கையும் வெடிப்பினின்று எழுந்து வாளை விலக்கியது. இறைவர் பின்னர் காட்சியளித்து நாயனார்க்கு அருள் செய்தார். இவ்வருஞ் செயலால் இவர் அரிவாட்டாய நாயனார் எனப் பெயர் பெற்றார்.

## 15. ஆனாய நாயனார்

கார்த்திகை மீ அஸ்தம் நட்சத்திரம்

மங்கலமா மலநாட்டு மங்கலமா நகருள்
    மருவுபுகழ் ஆனாயர் வளர்ஆ மேய்ப்பார்
கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்கு சார்ந்து
    குழலிசையின் ஐந்தெழுத்தும் குழைய வைத்துத்
தங்குசரா சரங்களெல்லாம் உருகா நிற்பத்
    தம்பிரான் அணைந்து செவி தாழ்த்தி வாழ்ந்து
பொங்கியவான் கருணைபுரிந்து 'என்றும் ஊதப்
    போதுக' என்று அருளவுடன் போயி னாரே. 17

கதைச் சுருக்கம்:

மழநாட்டில் திருமங்கலம் என்ற பதியுள் ஆனாயர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் பசுக்கூட்டங்களை மேய்த்துக் காப்பாற்றுபவர். வேய்ங்குழல் வாசிப்பவர். ஒருநாள் நன்கு

பூத்து இருந்த கொன்றை மரத்தினை கண்டு, அதனருகில் சென்று வேய்ங்குழலில் ஐந்தெழுத்தை இசையில் அமைத்து வாசித்தார். அவ்விசை கேட்டுச் சராசரங்களெல்லாம் உருகின. அக்குழலோசை சிவபெருமானின் திருச்செவியிலும் நுழைந்தது. இறைவனும் பெருங்கருணை புரிந்து 'என்றும் நம் சிவலோகத்தில் இருந்து வேய்ங்குழல் ஊத நம்பால் அணைவாய்' என்று அருளிச் செய்ய, நாயனாரும் சிவபெருமான் மருங்கு அணைந்து இன்புற்றிருந்தார்.

## 16. மூர்த்தி நாயனார்

ஆடி மீ கார்த்திகை நட்சத்திரம்

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தி யாராம்
வணிகர்திரு ஆலவாய் மன்னர் சாத்தத்
தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த ஊறுந்
தவிர்ந்துஅமணர் வஞ்சனையும் தவிர மன்னன்
இழந்தஉயி ரினனாக ஞாலம் நல்க
எழில்வேணி முடியாக இலங்கு வேடம்
முழங்குபுகழ் அணியாக விரை நீருக
மும்மையுல காண்டு அருளின் முன்னி னாரே. 18

கதைச் சுருக்கம்:

மதுரை மாநகரத்தில் வணிகர் குலத்தில் மூர்த்தியார் என்ற சிவபக்தர் இருந்தார். ஆலவாயில் அமர்ந்த இறைவனுக்குச் இறைவனுக்குச் சாத்தச் சந்தனம் அளித்து வந்தார். ஒருசமயம் சந்தனம் கிடைக்காமற் போகத் தன் கையையே சந்தனக் கல்லின்மீது உதிரம் வரத் தேய்த்தார். இறைவன் அருளால் ஊறு நீங்கியது. சந்தனக்கட்டை கிடைக்காதவாறு செய்த சமண அரசன் இறந்தான். அவ்வரசனுக்குப் புதல்வர்கள் இல்லை. இறைவன் அருளால்

இவரே அரசராகத் தேர்ந்து எடுக்கப் பெற்றார். மூர்த்தி நாயனார் சடைமுடியே முடியாகவும், கண்டிகையே அணிகலனாகவும், திருநீறே அபிஷேகப் பொருளாகவும் கொண்டு மும்மையால் உலகு ஆண்டு இறைவன் திருவடி நீழல் அடைந்தார்.

## 17. முருக நாயனார்

### வைகாசி மீ மூலம் நட்சத்திரம்

மன்னுதிருப் புகலூர்வாழ் முருக னாராம்
மறையவர்கோ வர்த்தமா னீச்ச ரத்தார்
சென்னியினுக்கு அழகமரும் மலர்கள் கொய்து
திருமாலை புகழ்மாலை திகழ சாத்திக்
கன்னிமதில் கழுமலநா டுடைய நாதன்
காதல்மிகு மணங்காணும் களிப்பி னாலே
இன்னல்கெட உடன்சேவித்து அருளால் மீளாது
இலங்குபெரு மணத்துஅரனை எய்தினாரே. 19

கதைச் சுருக்கம்:

முருகநாயனார் திருப்புகலூரில் வாழ்ந்தவர்; மறையவர் குலத்தவர்; அழகான மலர்கள் கொய்து திருமாலை முதலியவற்றைக் கட்டுவார்; வர்த்தமானீச்சரம் என்னும் ஆலயத்தில் எழுந்தருளிய எம்பெருமானுக்குச் சூட்டுவார். இத்தகைய சிவத்தொண்டு புரிந்த முருகனார் திருஞானசம்பந்தரின் திருமணத்தை தரிசிக்கும் மகிழ்வால், திருநல்லூர்ப் பெருமணத்தில் சோதியிற் கலந்து சிவபெருமான் திருவடிகளை அடைந்தார்.

## 18. உருத்திரப்பசுபதி நாயனார்

### புரட்டாசி மீ அசுவதி நட்சத்திரம்

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர் வாழும்
பசுபதியார் எனும்மறையோர் பணிந்து செந்தேன்
அங்கமல மடுவினிடை அல்லும் எல்லும்
அகலாதே யாகளமாய் அமர்ந்து நின்று
திங்கள்வளர் சடைமுடியான் அடிகள் போற்றித்
திருவெழுத்தும் உருத்திரமும் திகழ ஓதி
மங்கையிடம் உடையபிரான் அருளால் மேலை
வானவர்கள் தொழுமுலகின் மன்னி னாரே. 20

கதைச் சுருக்கம்:

சோழ நாட்டில் திருத்தலையூரில் வாழ்ந்த மறையவர், உருத்திரபசுபதியார். அவர் தாமரை மடுவில் கழுத்தளவு நீரில் நின்று சிவபெருமான் திருவடிகளைப் போற்றித் துதித்துத் திருவைந்தெழுத்தையும், *ஸ்ரீருத்திரத்தையும் இரவும், பகலும் வழுவாமல் செபித்து வழிபடுவார். இத்தொண்டின் பயனாய்ச் சிவபெருமான் திருவருளைப் பெற்றுச் சிவலோகம் அடைந்தார்.

---

*ஸ்ரீருத்திரம் வேதபுருடனுக்குக் கண்ணும், திருவைந்தெழுத்து கண்மணியுமாம். வேதத்துள் ஸ்ரீருத்திரமே மேலானது. அதனுள்ளும் திருவைந்தெழுத்தே மேலானது. அதனுள்ளும் 'சிவ சிவ' மேலானது.

## 19. திருநாளைப்போவார் நாயனார்

### புரட்டாசி மீ ரோகிணி நட்சத்திரம்

நன்மைதிகழ் மேற்காநாட்டு ஆதனூர் வாழ்
நந்தனார் புறத்தொண்டர் நாளைப் போகப்

பொன்மலிதென் புலியூர்க்கென்று உரைப்பார் புன்கூர்ப்
பொய்கை அமைத்து அடலேறு பிரிய நோக்கி
வன்மதில்சூழ் தில்லையிறை அருளால் வாய்ந்த
வண்தழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற
மின்மலிசெஞ் சடைமுனியாய் எழுந்து நாதன்
விளங்குநடம் தொழமன்றுள் மேவி னாரே. 21

கதைச் சுருக்கம்:

மேற்காநாட்டில் ஆதனூரில் நந்தனார் என்ற புறத் தொண்டர் (ஆதிதிராவிடர்) வாழ்ந்து வந்தார்; சிதம்பரம் ''நாளைப்போவேன், நாளைப்போவேன்'' என்று உரைப்பார்; அதனால் திருநாளைப்போவார் எனப் பெற்றார். அவர், திருப்புன்கூரில் ஒரு திருக்குளம் அமைத்தார். புன்கூர் இறைவனைக் காண விரும்பினார்; இறைவன் திருவருளால் இடபதேவரும் விலக, இறைவனைக் கண்டு வணங்கினார்; பின்னர் ஒருநாள் தில்லைக்குச் சென்றார்; தில்லைப் பெருமான் அருளால் நெருப்பில் மூழ்கிப் பூணூலும் சடைமுடியும் தாங்கிய முனிவராய் எழுந்தார்; தில்லைவாழந்தணர்கள் போற்றிப் புகழ்ந்தார்கள்; பொன்னம்பலத்தில் ஸ்ரீ நடராசப் பெருமானை தொழுது அவருடைய திருவடியை அடைந்தார்.

## 20. திருக்குறிப்புத்தொண்ட நாயனார்

சித்திரை மீ சுவாதி நட்சத்திரம்

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகர்ஏ காலிக்
குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்து ளார்பால்
வந்திறைவர் 'நமக்கின்று தாரீ ராகில்
வருந்தும்உடல்' எனவாங்கி மாசு நீத்த
கந்தைபுல ராதொழிய மழையும் மாலைக்
கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக் கல்மேல்

சிந்தமுடிப் புடைப்பளவில் திருவே கம்பர்
திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தி னாரே. 22

கதைச் சுருக்கம்:

தொண்டை நாட்டில் காஞ்சி மாநகரத்தில் ஏகாலியர் (வண்ணார்) குலத்தில் ஒரு சிவனடியார் இருந்தார். அவர் அடியார்களின் குறிப்பு அறிந்து திருத்தொண்டு செய்வார்; அதனால் திருக்குறிப்புத் தொண்டர் எனப் பெயர் பெற்றார். ஒருநாள் சிவபெருமான் ஏழை உருவத்தில் நாயனார் முன் வந்து பொழுது போகுமுன் தன் ஆடைகளைத் தோய்த்து உலர்த்திக் கொடுக்கவேண்டும் என்றும், கொடுக்காது போனால் தன் உடலுக்கு வருத்தம் நேரிடும் என்றும் கூறினார். நாயனார் அதை வாங்கிக் கொண்டார். மழை பொழியத் தொடங்கியது. பொழுதும் போயிற்று; கந்தையும் உலரவில்லை. தொண்டனார் அடியார்க்கு ஊறு நேர்ந்ததே என்று கலங்கினார்; என்ன செய்வது என்று அறியாது கற்பாறையில் தலையை மோதினார். திருவேகம்பர் தம் திருக்கையால் தடுத்துப் பிடித்துக் கொண்டார்; தம்முடைய சிவபதத்திற்கு அழைத்துக் கொண்டார்.

## 21. சண்டேசுவர நாயனார்

### தை மீ உத்திரம் நட்சத்திரம்

வேதமலி சேய்ஞலூர் எச்ச தத்தன்
விளங்கியசேய் மறைபயிலும் விசார சன்மர்
கோதனமேய்ப் பவன்கொடுமை பொருது தாமே
கொண்டுநிரை மண்ணியின்தென் கரையின் நீழல்
தாதகியின் மணலிலிங்கத்து ஆன்பால் ஆட்டத்
தாதைபொருது அவையிடறும் தாள்கள் மாளக்
காதிமலர்த் தாமம்உயர் நாமும் உண்ட
கலம்மகனும் பதம்அருளாற் கைக்கொண் டாரே. 23

கதைச் சுருக்கம்:

திருச்சேய்ஞலூரில் அந்தணர் குலத்தில் எச்சதத்தன் என்றொருவன் இருந்தான். அவர்கு விசாரசன்மர் என்று ஒரு மகன் இருந்தார். விசாரசன்மர் வேதங்களை நன்கு பயின்றார். அவ்வூரில் பசுக்களை மேய்ப்பவன் பசுவொன்றை அடித்ததைக் கண்டபொழுது விசாரசன்மர் தாமே ஆனிரைகளை மேய்க்கலானார்; பசுக்களும் மேய்ந்து நன்கு பால் சொரியத் தொடங்கின; மண்ணியாற்றின் தென் கரையில், ஆத்திமரத்தடியில் மணலினால் சிவலிங்கம் அமைத்துப் பசுவின் பாலைக்கொண்டு திருமஞ்சனம் ஆட்டினார். இவர் இங்ஙனம் செய்வதை அறிந்த இவர் தந்தை ஒருநாள் இவர் செய்கையை நேரில் கண்டார்; பாற்குடங்களை காலால் இடறினார். அதனைக் கண்ணுற்ற விசாரசன்மர் கோலொன்று எடுக்க அது மழுவாக மாறத் தந்தையின் கால்களை வெட்டினார். இறைவன் எழுந்தருளி ''நாம் சூடும் மலர்களும், உடுக்கும் ஆடைகளும், உண்ட பரிகலமும் உனக்கே யாகுக'' என்று கூறிச் சண்டீசப்பதமும் தந்தார். பின்னர் நாயனாரும் சண்டீசுவரபதத்தை அடைந்தார்.

## 22. திருநாவுக்கரசு நாயனார்

### சித்திரை மீ' சதயம் நட்சத்திரம்

போற்றுதிரு வாமூரில் வேளாண் தொன்மைப்
    பொருவில்கொறுக் கையர்அதிபர் புகழ னார்பால்
மாற்றரும்அன் பினில்திலக வதியாம் மாது
    வந்துதித்த பின்புமரு ணீக்கி யாரும்
தோற்றிஅமண் சமயமுறும் துயரம் நீங்கத்
    துணைவரருள் தரவந்த சூலைநோயால்
பாற்றருள்நீள் இடரெய்திப் பாடலிபுத் திரத்தில்
    பாழியொழித்து அரன்அதிகைப் பதியில் வந்தார்.

வந்துதமக் கையர்அருளால் நீறுசாத்தி
வண்தமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலம் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமில்அப் பூதிமகன் அரவு மாற்றி
அருட்காசு பெற்றுமறை அடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந்து ஐயாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூர் அரன்பாதம் பொருந்தி னாரே. 24

கதைச் சுருக்கம்:

திருவாமூரில் வேளாண் மரபில் கொறுக்கையர் குடியில் புகழனார்க்கும், மாதினியார்க்கும் இருகுழந்தைகள் பிறந்தார்கள். ஒருவர் திலகவதியார்; மற்றவர் அவரது தம்பி மருணீக்கியார். திலகவதியாரை மணம் புரிய இருந்த கலிப்பகையார் என்பவர் போர்மேற் சென்று உயிர் நீத்தார். தம்பியார் பொருட்டுத் திலகவதியார் உயிர் வாழ்ந்தார். ஆனால் மருணீக்கியாரோ சமண சமயம் புகுந்தார்; தருமசேனர் என்ற சிறப்பெய்தினார். திலகவதியார் திருவதிகை வீரட்டானத்து இறைவனை வேண்ட மருணீக்கியாராகிய தருமசேனர்க்குச் சூலைநோய் வந்தது. சமணர்களின் மந்திர தந்திரங்களால் சூலை நீக்க இயலவில்லை. தருமசேனர் பாடலிபுரத்தினின்று (திருப்பாதிரிப்புலியூரினின்று) திருவதிகைக்கு வந்தார். தமக்கையாராகிய திலகவதியார் திருவாளன் திருநீற்றை அளித்தார். தம்பியாரும் பூசிக்கொண்டு ''கூற்றாயினவாறு விலக்ககிலீர் என்ற பதிகத்தைப்'' பாடினார். சூலை நீங்கியது. இறைவனும் திருநாவுக்கரசு என்று திருப்பெயர் அருளினார். திருநாவுக்கரசர் சைவசமயஞ் சார்ந்தமை அறிந்த சமணர் பல்லவ அரசனிடம் முறையிட்டனர். அவ்வரசனும் அவர் சொற்கேட்டு நாவுக்கரசரை நீற்றறையிலிட்டான்; நீற்றறை குளிர்ந்தது. நஞ்சு கலந்த பாற்சோறூட்டுவித்தான்; நஞ்சும் அமுதாயிற்று. யானையை

ஏவினான். யானை ஏவிய பாகர்களையே கொன்று நாவுக்கரசரை வணங்கி ஓடியது. கல்லிற் பிணித்துக் கடலில் இட்டான்; கல் தெப்பமாகியது. திருநாவுக்கரசரும், திருப்பாதிரிப் புலியூர் பாங்கர் கரை ஏறினார்; பின்னர் திருப்பெண்ணு கடத்தில் சூலமும், இடபமும் பொறிக்கப் பெற்றுர்; திங்களூரில் அரவு தீண்டியிறந்த அப்பூதியடிகளாரின் மூத்தமகனை உயிர்பெறச் செய்தார்; திருவீழிமிழலையில் நித்தலும் காசு பெற்று அடியார்களை உண்பித்தார்; திருமறைக்காட்டில் அடைபட்டிருந்த திருக்கோயில் கதவுகளைத் திறந்தருளினார். கயிலையில் குளத்தினில் மூழ்கித் திருவையாற்றில் எழுந்தார்; திருப்புகலூரில் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தார்.

## 23. குலச்சிறை நாயனார்

ஆவணி மீ  அனுஷ நட்சத்திரம்

கோதில்புகழ் தருமணமேற் குடியார் கோவண்
  குலச்சிறையார் தென்னர்குல அமைச்சர் குன்ரு
மாதவர்கள் அடிபரவும் மரபார் பாண்டி
  மாதேவி யார்அருள்வான் பயிர்க்கு வேலி
காதல்மிகு கவுணியர்கோன் வாதில் தோற்ற
  கையரைவை கைக்கரைசேர் கழுவிலேற்றும்
நீதியினார் ஆலவாய் நிமலர்ச் சேர்ந்த
  நின்மலனார் என்மலங்கள் நீக்கினாரே. 26

கதைச் சுருக்கம்:

பாண்டி நாட்டு மணமேற்குடியில் தோன்றியவர் குலச்சிறையார். இவர் நெடுமாறன் என்ற பாண்டியனுக்கு அமைச்சர்; சிவனடியார்களின் திருவடிகளை வணங்குபவர்; பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் வளர்த்த சைவம் என்னும் பயிருக்கு வேலிபோன்றவர்; திருஞான

சம்பந்தரிடம் வாதிலே தோற்ற சமணரை வைகைக் கரையில் கழுவில் ஏற்றுவித்து சைவசமயத்தை நிலைபெறச் செய்தவர். இவர் சிவத்தொண்டு பலசெய்து ஆலவாய் அரன்பாதம் இடைவிடாது எண்ணி நற்பேறு அடைந்தார்.

## 24. பெருமிழலைக்குறும்ப நாயனார்

ஆடி மீ சித்திரை நட்சத்திரம்

கொண்டல்புனி வளர்சோலை மிழலை நாட்டுக்
கோதில்புகழ்ப் பெருமிழலைக் குறும்ப னார்சீர்
அண்டர்பிரான் அடியவருக்கு அடியா ராகும்
ஆதரவால் அணுக்கவன் றொண்டர்க் காளாய்
மண்டொழும்எண் டருசித்தி வாய்த்து ளார்தாம்
வன்றொண்டர் வடகயிலை மருவு நாள்முன்
எண்டிகழும் மறைமூல நெறியூ டேகி
இலங்கொளிசேர் வடகயிலை எய்தி னாரே. 27

கதைச் சுருக்கம்:

மிழலை நாட்டிலுள்ள மிழலையில் குறும்பர் வாழ்ந்து வந்தார். இவர் சிவனடியார்களுக்கு அடியார் ஆகும் தொண்டு பூண்டவர்; வன்றொண்டராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளை இடையறாது சிந்தித்து அஷ்டசித்திகளும்* கைவரப் பெற்றார்; சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலுக்கு எழுந்தருளுதலை யோக நிலையில் அறிந்து முதல்நாளே பிரமரந்திர வழியில் திருக் கயிலை அடைந்தார்.

---

* அஷ்டமாசித்தி-அணிமா, மகிமா, லகிமா, கரிமாபிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன.

## 25. காரைக்காலம்மையார்

பங்குனி மீ  சுவாதி நட்சத்திரம்

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன் மிக்க
தனதத்தன் தரும்புனித வதியார் மாவின்
செங்கனிகள் திருவருளால் அழைப்பக் கண்டு
திகழ்கணவன் அதிசயித்துத் தேசம் நீங்க
அங்கவுடல் இழந்துமுடி நடையால் ஏறி
'அம்மையே' எனநாதன் அப்பா! என்று
பொங்குவட கயிலேபணிந்து ஆலங் காட்டில்
புனிதநடம் அனவரதம் போற்றி னாரே.

கதைச் சுருக்கம்:

காரைக்காலில் தனதத்தன் என்ற வணிகர் குலத்தலேவனுக்குப் பெண் மகவு பிறந்தது; அவர்க்குப் புனிதவதி என்று பெயரிட்டார். புனிதவதியார் சிவபக்தியோடு வளர்ந்தார்; நாகைநிதிபதி மைந்தன் பரமதத்தனே மணந்தார்; ஒருநாள் கணவன் அனுப்பிய இரு மாங்கனிகளில் ஒன்றைச் சிவனடியார்க்குப் படைத்துப் பிறகு மற்றென்றைத் தன் கணவனார்க்குப் படைத்தார். கணவனார் அக்கனியின் இனிமையை நுகர்ந்து 'பிறிதொன்று இடுக' என்றார். கொணர்வார் போல் சென்று, அம்மையார் இறைவன் திருவருளால் ஒரு கனி பெற்றுக் கணவனார்க்குப் படைத்தார். அதன் அதி மதுரச் சுவையினே அறிந்து ஐயுற்ற கணவன் இறை அருளாயின் 'பிறிதொன்று தருக' என்றார் இறையருளால், இன்னுமொரு கனியைப் பெற்று அளித்தார். கணவனார் அதிசயித்தார்; சோழ நாட்டையே விட்டார்; வேற்று நாட்டிற்குச் சென்று வேறு திருமணம் செய்து வாழ்கின்றமை அறிய வர, அம்மையார் அங்கு அழைத்துச் செல்லப்பட்

டார். அக்கணவனார் அம்மையாரை வணங்க, அம்மையார் என்புடம்பு தாங்கித் தலையாலே நடந்து திருக்கயிலையை அடைந்தார்; இறைவன் 'அம்மையே' என்று அழைத்தார். அம்மையார் 'அப்பா!' என்று ஆதரவால் கூறினர். பின்னர் இறைவன் அருளிச்செய்த வண்ணம் அம்மையார் வடதிரு வாலங்காடு அடைந்து அங்கு எழுந்தருளியிருக்கும் இறைவ னது திருநடம் கண்டு ஆனந்தம் சேர்ந்து என்றும் நீங்காப் பெரும் பேறு பெற்றார்.

## 26. அப்பூதியடிகள்

### தை மீ சதயம் நட்சத்திரம்

அந்தமில்நல் திங்களூர் வரும் அப்பூதி
அருமறையோர் திருநாவுக்கரசின் நாமம்
பந்தரிடை எழுதக்கண்டு அரசும் எய்தப்
பணிந்துபரி கலம்நேடிப் படப்பை சேர்ந்த
மைந்தனுயிர் உயர்கதலி இலைமேல் துஞ்சும்
வாளரவு கவரவுடன் மறைத்தல் கேட்டுச்
சிந்தைமகிழ்ந்து உயர்பதிக மருந்தால் தீர்த்துத்
திருவமுது செயவருளைச் சேர்ந்து ளாரே. 29

கதைச் சுருக்கம்:

திங்களூரில் அப்பூதியடிகள் என்றொரு மறையவர் இருந் தார். அவர் தாம் அமைத்த தண்ணீர்ப்பந்தருக்குத் திருநாவுக் கரசரது திருப்பெயரை இட்டார். அதனைத் திருநாவுக்கரசர் திங்களூர்ப் பக்கம் வருகையிற் கண்டார்; அப்பூதியடிகளின் அன்பைக் கேட்டறிந்து அவரது இல்லத்திற்கு ஏகினார். திருநாவுக்கரசருக்கு திருவமுது படைத்தற்காக வாழைக் குருத்து அரியும்பொழுது அப்பூதியடிகளின் மூத்தமகனான

வன் பாம்பொன்று தீண்டியதால் இறந்தனன். திருநாவுக் கரசருக்குத் தெரியாதவாறு இது மறைக்கப்பட்டது. திரு நாவுக்கரசர் இதனையறிந்து ''ஒன்று கொலாம்'' என்ற திருப்பதிகம் பாடி விடம் தீர்த்து, இறந்த பிள்ளையை எழுப்பித் திருவமுது செய்தருளினார்; அப்பூதியடிகளின் பெயரைத் தம் பாடலில் வைத்துப் பாராட்டினார். அப்பூதியடிகளாரும் திருநாவுக்கரசரின் பெயரைச் செப்புதலால் திருவருளைப் பெற்று உய்ந்தார்.

## 27. திருநீலநக்க நாயனார்

வைகாசி மீ மூலம் நட்சத்திரம்

நீதிதரு மறையோர்வாழ் சாத்த மங்கை
    நீலநக்கர் அயவந்தி நிமலர் மேனி
ஊதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளை நீத்தார்க்கு
    உமியாத இடம்நாதன் உறுநோய் காட்டக்
காதல்மிகு மனைவியையும் மகிழ்ந்து மேவிக்
    காழியர்கோன் அமுதுசெயக் களித்து வாழ்ந்து
வேநிகையிற் பாணனார்க்கு இடமும் நல்கி
    விளங்குபெரு மணத்தரனை மேவி னாரே. 30

கதைச் சுருக்கம்:

சோழ நாட்டில் சாத்தமங்கையில் மறையவர் குலத்தில் பிறந்தவர், திருநீலநக்கர் அத்தலத்தில் அயவந்தி என்ற திருக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமான் திருமேனியின் மீது சிலந்திப்பூச்சி விழுந்தது. நீலநக்கரின் மனைவியார் அதனைக் கண்டதும் வாயால் ஊதி எச்சில் உமிழ்ந்தார். நீலநக்கர் தம் மனைவியின் அன்பை அறியாது 'நீ சிவாப ராதம் செய்தனை' என்று கடிந்து நீக்கினார். இறைவன்

அன்றிரவு நீலநக்க நாயனார் உமியாத இடம் நோயுற்று இருப்பதைக் காட்டினார். நாயனார் மீண்டும் தம் மனைவியை ஏற்றுக்கொண்டார். ஒரு சமயம் திருஞானசம்மந்தர் எழுந்தருள அவருக்கு நாயனார் திருவமுது செய்வித்தார்; திருஞானசம்பந்தருடன் வந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரும், அவரது மனைவியாரும் தங்குவதற்கு நடுமனையில் வேதிகையின் அருகே இடமளித்தார். திருநல்லூர்ப் பெருமணத்தில் திருஞானசம்பந்தரின் திருமணத்தைச் சேவித்து அரனடி அடைந்தார்.

## 28. நமிநந்தியடிகள்

வைகாசி மீ" பூசம் நட்சத்திரம்

நண்ணுபுகழ் மறையோர்வாழ் ஏமப் பேறூர்
நமிநந்தி யடிகள் திருவிளக்கு நல்க
எண்ணெய்அம ணர்கள்விலக்க நீரால் ஆரூர்
இலங்கும் அர னெறியாருக்கு ஏற்று நாளில்
கண்ணமணர் கெடக்கண்பெற்று அடிகள் வாழக்
காவலனால் நிபந்தங்கள் கட்டு வித்தே
அண்ணலருள் கண்டாருர் அமர்ந்து 'தொண்டர்க்கு
ஆணி' எனுள் அரசினருள் அடைந்துளாரே. 31

கதைச் சுருக்கம்:

சோழநாட்டு ஏமப்பேறூரில் மறையவர் குலத்தில் தோன்றியவர் நமிநந்தியடிகள். இவர் ஒருநாள் திருவாரூர்க் கோயிலுள்ள அரனெறி என்னும் ஆலயத்தில் திருவிளக்கு ஏற்றவேண்டுமென்று விரும்பினார்; ஒரு வீட்டில் நெய் கேட்டார். அவ்வீடு சமணர் வீடாதலின் அவர்கள் தர மறுத்தனர். 'நீரால் திருவிளக்கு இடுக' என்று அசரீரி வாக்கு எழுந்தது. நாயனார் திருக்குளத்து நீரால் திருவிளக்கிட்

டார். திருவிளக்குகளும் சுடர் விட்டெரிந்தன. நாடொறும் இங்ஙனமே திருவிளக்குத் தொண்டு செய்யலானார். இந்தச் சமயத்தில் தான் தண்டியடிகள் நாயனாரும் கண் பெற்ருர். சமணர்களும் கண்ணிழந்தனர். அத்தகைய சமணர்களைத் தண்டித்த சோழ அரசன் அமுதுபடி முதலான நிபந்தங்கள் அமைத்தான். திருவாரூர்ப் பிறந்தார்கள் யாவரும் சிவ கணங்களாக விளங்குதலைத் திருவாரூர்ப் பெருமான் அருளால் கண்டறிந்து நாயனார் திருவாரூரில் குடிபுகுந்தார்; அடியார்களுக்கு வேண்டுவன புரியலானார். திருநாவுக்கரசரும் 'தொண்டர்க்காணி' என்று இவரைச் சிறப்பித்துள்ளார்.

## 29. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுர்

### வைகாசி மீ மூலம் நட்சத்திரம்

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோன் அமுதுஉமையாள் கருதி யூட்டும்
ஏழிசையின் அமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை இசைய ஏறி
வாழுமுய லகன் அகற்றிப் பந்தர் ஏய்ந்து
வளர்கிழிபெற்று அரவின்விடம் மருகல் தீர்த்து
வீழிநகர்க் காசுஎய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மேனியின் வெப்பு விடுவித் தாரே.
ஆரெரியிட்டு எடுத்தஏடு அவைமுன் னேற்றி
ஆற்றிலிடும் ஏடெதிர்போய் அணைய ஏற்றி
ஓரமணர் ஒழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓடம்ஏற்றிக்
காருதவும் இடிபுத்தன் தலையில் ஏற்றிக்
காயாத பனையின்மீது கனிகள் ஏற்றி
ஈரமிலா அங்கமுயிர் எய்த ஏற்றி
இலங்குபெரு மணத்தரனை எய்தி னாரே. 33

கதைச் சுருக்கம்:

சீகாழிப்பதியில் கவுணிய கோத்திர அந்தணர் மரபில் சிவபாத இருதயருக்கு மகனராக அவதாரஞ் செய்தவர், திருஞானசம்பந்தர். இவர் பிரம்மதீர்த்தக்கரையில் உமா தேவியாரால் ஞானப்பாலமுதம் ஊட்டப்பெற்றுச் சிவஞான சம்பந்தர் ஆனார்; திருக்கோலக்காவில் பொற்ருளம் பெற்ருர்; திருநெல்வாயில் அரத்துறையில் முத்துச்சிவிகை அளிக்கப் பெற்ருர்; திருபாச்சிலாச்சிராமத்தில் கொல்லிமழவனது மக ளுற்ற முயலகன் என்னும் நோயைப் போக்கினார்; திருப் பட்டீச்சரத்தில் முத்துப்பந்தர் கிடைக்கப்பெற்ருர்; திருவாவடு துறையில், தம் தந்தையார் வேள்வி செய்தற்பொருட்டுப் பெற்ருர்; திருமருகலில் அரவு தீண்டி இறந்த வணிகனே உயிர் பெறச் செய்தார்; திருவீழி மிழலேயில் நாடொறும் பொற்காசு பெற்று அடியார்களுக்கு அமுதூட்டினார்; திரு மறைக்காட்டில் ‘சதுரம் மறைதான்’ என்ற திருப்பாடல் பாடி மறைக்கதவிளே மூடச் செய்தார்; பாண்டி நாட்டிற்குச் சென்று திருநீற்றுப் பதிகம் பாடி நெடுமாறனது வெப்பு நோயைத் தீர்த்தருளினார்.

‘‘போகமார்த்த’’ என்று திருநள்ளாற்றுத் திருப்பதி கத்தை நெருப்பிலிட்டுப் பச்சைபதிகமாகக் காட்டினார். ‘‘வாழ்க அந்தணர்’’ என்று திருப்பாசுரம் எழுதிய ஏட்டினே வைகையிலிட்டு எதிரேறிச் செல்லுமாறு செய்தார்; தாம் செய்த சூளுரையின்படி சமணர்கள் கழுவேறக் கண்டார்; திருக்கொள்ளம் பூதூரில் ‘‘கொட்டமே கமழும்’’ என்ற பதிகம் பாடிக் காவிரியில் ஓடம் விட்டுக் கரையேறித் திருக் கொள்ளம் பூதூரை அடைந்தார்; திருத்தெளிச்சேரியில் இவர் மாமன் ‘‘புத்தர் சமண் கழுக்கையர்’’ என்ற பாசுரத்தைக் கூறப் புத்த நந்தி என்பவன் தலேயில் இடிவிழச் செய்தார்; ஞான சம்பந்தர் தொண்டை நாட்டில் திருவோத்தூரில்

ஆண்பனையைப் பெண்பனை ஆக்கினார்; மயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணுருவாக்கினர்; திருநல்லூர்ப் பெருமணத்தில் திருமணச் சடங்குகள் முடிவுற்றுத் தோன்றிய சிவ சோதியுள் கலந்தருளினார்.

## 30. ஏயர்கோன்கலிக்காம நாயனார்

### ஆனி மீ ரேவதி நட்சத்திரம்

ஏதமில்வே ளாளர் பெருமங்க லத்துள்
 ஏயர்கோன் கலிக்காமர் 'இறையை நேரே
தூதுகொளும் அவன் அணுகில் என்னும்' என்னும்
 துணிவினர்பால் இறைவன்அருஞ் சூலை ஏவி
'வேதனையவன் ருெண்டன்வரின் நீங்கும்' என்ன
 வெகுண்டு உடல்வாள் கொடுதுறந்து மேய நாவாற்
போதகமும் உடல்இகழ எழுந்து தாழ்ந்து
 போற்றியது விலக்கியருள் பொருந்தி ஞரே. 34

கதைச் சுருக்கம்:

சோழ நாட்டில் திருப்பெருமங்கலம் எனும் ஊரில் வேளாண் மரபில் ஏயர் குடியில் தோன்றியவர் கலிக்காமர். சுந்தரர் சிவபெருமானைப் பரவையார்பால் தூது அனுப்பியதை இவர் கேட்டு மிகவும் மனம்நொந்தார்; 'சுந்தரரைக் காணநேர்ந்தால் என்னுகுமோ? என்பார். சுந்தரரையும், கலிக்காமரையும் ஒன்றுபடுத்தத் திருவுளங்கொண்ட சிவபெருமான், கலிக்காமருக்குச் சூலைநோய் வருமாறு செய்து, பின்னர்க் கலிக்காமரிடம் சென்று 'இந்நோய் வன்ருெண்டர் வரின் நீங்கும்' என்று அருளினர். அங்ஙனமே வன்ருெண்டர் வருவதை அறிந்து கலிக்காமர் உடைவாளால் தன் வயிற்றைக் கிழித்துக் கொண்டு இறந்தார். வன்ருெண்டரும் வந்தார்; செய்தி அறிந்தார்; 'யானும் உயிர் துறப்பேன்'

என்று உடைவாளை எடுத்தார். இறைவனருளால் கலிக்காமர் உயிர் பெற்றெழுந்தார்; சுந்தரரின் செய்கையை விளக்கி, அவர் திருவடிகளில் விழுந்து வணங்கி அருள் பெற்றார்.

## 31. திருமூலநாயனார்

ஐப்பசி மீ அசுவதி நட்சத்திரம்

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
    காவிரிசூழ் சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயரம் நீடும்
    பசுக்களைக்கண்டு அவனுடலிற் பாய்ந்து போத
அயலாகப் பண்டையுடல் அருளால் மேவி
    ஆவடுதண் டுறையாண்டுக்கு ஒருபா வாகக்
குயிலாரும் அரசடியில் இருந்து கூறிக்
    கோதிலா வடகயிலை குறுகி னாரே.

கதைச் சுருக்கம்:

திருமூலர் திருக்கயிலாயத்தில் திருவருள் பெற்ற சித்தர்களில் ஒருவர். இவர் பொதிகை மலைக்குச் செல்ல விரும்பினார்; வழியில் காவிரிபாயும் திருவாவடுதுறைக்கு வந்தார்; ஒருநாள் பசுக்களை மேய்க்கச் சென்ற இடையன் மூலன் என்பான் இறந்துபட்டதை அறிந்த பசுக்கள் துயருற்று இருத்தலைக் கண்டார்; பசுக்களின் துயரை நீக்கக் கருதினார்; தன்னுடலை ஓரிடத்தில் அமைத்து மூலனுடலில் பாய்ந்தார். பசுக்கள் மகிழ்ந்தன. மாலைப்பொழுது வந்ததும் பசுக்கள் தத்தம் உறையுளுக்குத் திரும்பிச் சென்றன. திருமூலர் பின்னே சென்றார்; மறுநாள் பண்டையுடலை வைத்திருந்த இடத்துக்கு வந்தார்; அது கிடைக்கவில்லை. மூலன் உடலிலேயே அமர்ந்து, திருமூலர் ஆகித் திருவாவடுதுறையிலுள்ள திருக்கோயிலுக்குச் சென்று அரச மரத்தடியில் சிவயோகத்

திருந்து ஆண்டொன்றுக்கு ஒரு பாடல் என மூவாயிரம் திருமந்திரப் பாடல்கள் பாடியளித்தருளித் திருக்கயிலையை அடைந்தார்.

## 32. தண்டியடிகள்

பங்குனி மீ சதயம் நட்சத்திரம்

திருவாரூர் வருந்தண்டி யடிகள் காட்சி
சேராதார் குளந்தொட்டற்கு அமணர் சீறிக்
''குருடா! நீ முன்செவிடுங் கூடிற்று'' என்று
குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத் தங்கண்
அருளாலே விழித்தெவரும் அந்த ராக
அமணர்கலக் கம்பலகண் டவர்கள் பாழிப்
பருவான கற்பறித்தா விக்கரையுங் கட்டிப்
பரனருளால் அமழுலகம் பற்றி னரே. 36

கதைச் சுருக்கம்:

திருவாரூரில் பிறந்தவர், தண்டியடிகள். இவர் பிறவிக் குருடர். இவர் திருவாரூர்த் திருக்குளத்தைப் பெருக்க முயன்றார்; திருக்குளத்தில் ஒரு தறியும் கரையில் ஒரு தறியும் நட்டு இரண்டையும் கயிறுகொண்டு பிணித்து அதைத் தடவிக்கொண்டே சென்று குளத்தைக் கல்லினர். சமணர்கள் இவர் செயலைக்கண்டு வெறுத்துத் தடுத்தார்கள். சமணர் பேச்சைத் தண்டியடிகள் கேட்கவில்லை. அதனால் அவர்கள் ஏ! குருடா! உனக்குச் செவிடும் வந்தது போலும் என்று கூறித் குறித் தறியைப் பறித்து எறிந்தார்கள். தண்டியடிகள் வெகுண்டு, 'யான் காணக்கண் பெற்றால் நீவிர் என் செய்வீர்? என்று கேட்கச் சமணர்கள், 'கண் பெறின் இவ் வூரை விட்டுச் செல்வோம்' என்றனர். மறுநாள் தண்டியடிகள், அரசன் முன்னிலையில் திருக்குளத்தில் மூழ்கிக் கண் பெற்று

எழுந்தார்; சமணர் யாவரும் கண் இழந்தனர். அரசன் சமணரை ஊரை விட்டு அகற்றினான்; சமணப் பாழிகளை இடித்துக் குளத்தின் கரைகளைச் செப்பனிட்டான். நாயனார் தொண்டுகள் பல செய்து சிவனடி அடைந்தார்.

## 33. மூர்க்க நாயனார்

கார்த்திகை மீ" மூலம் நட்சத்திரம்

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட் டூர்வாழ்
தொல்லுழவர் நற்சூதர் சூது வென்று
கொண்டபொருள் கொண்டன்பர்க்கு அமுத ளிக்குங்
கொள்கையினர் திருக்குடந்தை குறுகி யுள்ளார்
விண்டிசைவு குழறுமொழி வீணர் மாள
வெகுண்டிடலான் 'மூர்க்கர்'என விளம்பும் நாமம்
எண்டிசையும் மிகவுடையார் அண்டர் போற்றும்
எழுலகும் உடனாளும் இயல்பி னாரே. 37

கதைச் சுருக்கம்:

தொண்டை நன்னாட்டில் திருவேற்காடு என்ற பதியில் வேளாளர் மரபில் பிறந்தவர், மூர்க்க நாயனார். இவர் சூதாட்டத்தில் வல்லவர்; சூது ஆடி வென்றுகொண்ட பொருளையெல்லாம் அடியார்களுக்கு அமுதூட்டுவதில் செலவு செய்தார். ஒருசமயம் இவர் திருக்குடந்தைக்கு (கும்பகோணத்துக்கு) வந்தார்; அங்கும் சூதாடிப் பெற்ற பொருளை கொண்டு அடியார்களுக்கு அமுதூட்டினார்; சூதாடும்பொழுது ஆட்டத்தில் நீதிதவறி மறுத்தவரை உடைவாளால் குத்திக் கொல்வார்; அதனால் மூர்க்கர் என்னும் பெயரைப் பெற்றார்; இங்ஙனம் அடியார்களுக்கு அன்னம் அளித்துப்பின் அரனடி அடைந்தார்.

## 34. சோமாசிமாற நாயனார்

வைகாசி மீ ஆயில்யம் நட்சத்திரம்

அம்பர்நகர் அந்தணர்சோ மாசி மாறர்
அன்பர்களாம் யாவர்க்கும் அன்பின்அமு தளிப்பார்
உம்பர்நிகழ் வகையாகம் பலவுஞ் செய்யும்
உண்மையினர் ஐந்தெழுத்தும் ஓவா நாவார்
நம்பர்திகழ் திருவாரூர் நயந்து போற்றும்
நாவலர்கோன் அடிபரவும் நன்மை யாலே
இம்பர்தொழ உம்பர்பணிந்து ஏத்த மேலே
ஏழுலகும் உடனாளும் இயல்பி னரே. 38

கதைச் சுருக்கம்:

சோமாசிமாறர் சோழ நாட்டு அம்பர் என்ற ஊரவர்; சிவனடியார்களுக்கு அன்பால் அமுதூட்டுபவர்; யாகம் பல செய்தவர்; திருவைந்தெழுத்து ஓதும் நியமம் பூண்டவர்; திருவாரூர் அடைந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருவடிகளை அன்பால் இடையறாது போற்றினார்; இச்சிறப்பால் சிவலோகத்தை அடைந்து இன்புற்றார்.

## 35. சாக்கிய நாயனார்

மார்கழி மீ பூராடம் நட்சத்திரம்

சங்கமங்கை வரும்வேளாண் தலைவர் காஞ்சிச்
சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ் சைவத்
துங்கமலி பொருளுமுணர்ந்து அந்த வேடம்
துறவாதே சிவலிங்கந் தொழுவோர் கண்டோர்
அங்கல்மலர் திருமேனி அழுந்தச் சாத்தி

அமருநாள் மறந்தொருநாள் அருந்தா தோடிச்
செங்கலெறிந் திடுமளவில் மகிழ்ந்த நாதன்
திருவருளால் அமருலகஞ் சேர்ந்து ளாரே 39

கதைச் சுருக்கம்:

திருசங்கமங்கையில், வேளாண் மரபில் தோன்றியவர், சாக்கிய நாயனார். இவர் காஞ்சீபுரம் அடைந்து, பௌத்த மதம் சார்ந்து, அது தவறென அறிந்து, பின் சைவசமய உண்மைகளை நன்கு உணர்ந்தார்; ஆனாலும் பௌத்த வேடத்தைக் களையாது சிவலிங்கப் பெருமானை வணங்கி வந்தார்; நாடோறும் சிவலிங்கத்தைக் கண்டு வழிபட்ட பின்னரே உணவு அருந்தும் நியமமும் பூண்டார்; ஒருநாள் வழியில் ஒரு சிவலிங்கத்தைக் கண்டார்; அங்கு கிடந்த கல்லையே மலராகச் சாத்தினார்; அன்று முதல் நாடோறும் கல்லினால் எறிந்து வழிபடும் நியமத்தை மேற்கொண்டார்; ஒருநாள் இவ்வழிபாட்டை மறந்து உணவு உண்ணச் சென்றார்; தொண்டு நினைவுக்குவர, உணவு கொள்ளாது ஓடிச் சிவ லிங்கப்பெருமான்மேல் கல்லெறிந்தார். இறைவரும் மகிழ்ந்து நாயனாரைத் தம்முலகுக்கு அழைத்துக் கொண்டார்.

## 36. சிறப்புலி நாயனார்

கார்த்திகை மீ பூராடம் நட்சத்திரம்

திருவாக்கூர் அருமறையோர் உலகம் ஏத்தும்
சிறப்புலியார் மறப்புலியார் உரிமேற் செங்கண்
அரவார்த்தார் வருமேற்றூர்க்கு அன்ப ரானார்க்கு
அமுதளிப்பார் ஒளிவெண்ணீறு அணிந்த மார்பர்
பெருவாக்கான் மறைபரவி யாகம் போற்றும்
பெற்றியினர் ஐந்தெழுத்தும் பிறழாது ஓதிக்

கருவாக்கா இறைவன்தாள் இணைகள் சேர்ந்த
கருத்தினார் எனையாவும் திருத்தி னாரே. 40

கதைச் சுருக்கம்:

சோழ மண்டலத்தில் திருஆக்கூரில் வைதிக அந்தணர் குலத்தில் பிறந்தவர், சிறப்புலியார். இவர் சிவனடியார்களுக்கு உணவளிப்பார்; வெண்ணீறு நிறைய அணிவார்; வேதம் ஓதுவார்; யாகங்கள் செய்வார்; திருவைந்தெழுத்து இடைவிடாது ஓதுவார்; இங்ஙனம் சிவத்தொண்டுகள் பல செய்து சிவபதம் அடைந்தார்.

## 37. சிறுத்தொண்ட நாயனார்

சித்திரை மீ பரணி நட்சத்திரம்

பல்குமருத் துவர்அதிபர் செங்காட்டங் குடிவாழ்
படைத்தலைவர் அமுதளிக்கும் பரஞ்சோதி யார்மெய்ச்
செல்வமிகு சிறுத்தொண்டர் காழி நாடன்
திருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன் தன்னை
நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத் திடப்பின்
நன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட் டுதவப்
புல்கவரும் வயிரவர்தாம் மகிழ்ந்துமக வருளப்
போற்றியவர் சிவனருளே பொருந்தி னாரே 41

கதைச் சுருக்கம்:

சோழமண்டலத்தில் செங்காட்டங்குடியில் மாமாத்திரர் குலத்தில் பரஞ்சோதியார் என்பவர் பிறந்தார். இவர் ஆயுர்வேதக்கலையிலும் (மருத்துவத்திலும்) சிறந்தவர்; படைத்தலைவர்; வாதாபிவரையிலும் சென்று வென்று வந்தவர்;

சிவாநுபூதிச் செல்வம் பொருந்தியவர்; அடியார்களிடத்தில் தாழ்வு எனும் தன்மைதாங்கும் மனமுடைய சிறியராய் நிற்றலால் சிறுத்தொண்டர் எனப்பெற்ருர்; இவரது மனைவியார் திருவெண்காட்டு நங்கை; இவர் மகன் சீராளர் எனப்பெற்ருர். அந்நாளில் திருஞான சம்பந்தர் திருச்செங் காட்டங்குடிக்கு வந்தார்; சிறுத்தொண்டரைத் திருப்பதிகத்துச் சிறப்பித்துப் பாடினுர். பின்னர் ஒருநாள் இறைவன் பைரவ ராகி வந்து பிள்ளைக்கறி கேட்கத் தம் ஒரே மகனை அரிந்து தலைப்பகுதி தவிர்த்து எஞ்சிய பகுதியினைச் சமைத்துப் பைரவர்க்கிட்டனர். பைரவர் தலையிறைச்சியும் வேண்டும் என்ருர். சந்தன நங்கை என்ற தாதி தலைப்பகுதியைச் சமைத்து வைத்திருப்பதாகக் கூற, அதுவும் கொணர்ந்து படைக்கப்பட்டது. பயிரவர் உடன் உண்ணுவதற்கு நாயனுரது மகனை அழைக்கச் சொன்னுர். திகைப்புற்ற நாயனுர் மனைவியோடு வெளியே சென்று 'சீராளா' என்று அழைத் தார். இறைவன் அருளால் சீராளரும் ஓடி வந்தார். மகிழ்ந்து அவ்விருவரும் உள்ளே வருமுன் பயிரவர் மறைந் தருளினுர். சிவபெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியாக எழுந்தருளிக் காட்சி கொடுத்தருளினுர். நாயனுர் உள்ளிட்ட நால்வரும் சிவனருள் பெற்றனர்.

## 38. சேரமான்பெருமாள் நாயனுர்

### மாசி மீ சதயம் நட்சத்திரம்

காவலர்ம கோதையார் கொடுங்கோ ளூர்க்கோக்
　　கழறியவை அறிந்தகோச் சிலம்போசைக் கருத்தார்
நாவலர்கோன் நண்பர்அடிச் சேரன் என்றே
　　நவின்றுவரும் வண்ணனை நயந்த கோநற்
பாவலர்கோப் பாணபத் திரனுல் வாய்ந்த

பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோ வெற்பின்
மேவியகோ ஆனைக்குக் குதிரை வைத்த
வீரர்கோ எனையாளும் சேரர் கோவே. 42

கதைச் சுருக்கம்:

சேரநாட்டில் மகோதை என்னும் கொடுங்கோளூரில் பெருமாக்கோதையார் என்பவர் அரசராய் இருந்தார். அவர் யாவும் யாரும் கழறினவும் அறியும் ஆற்றல் பெற்றமையால், கழறிற்றறிவார் எனப்பெற்றார். அவர் தில்லைக்கூத்தப் பெருமானைப் பூசிப்பவர்; பூசை முடிவில் கூத்தப் பிரானின் சிலம்பொலி கேட்பார். ஒருநாள் சேரமானுக்குத் திருச்சிலம்பொலி கேட்கவில்லை. சேரமான் வருந்தினார்; உயிர் துறக்கத் துணிந்தார். இறைவன் 'வன்றொண்டன் பாட்டில் யாம் ஈடுபட்டிருந்தமையால் நேரம் தாழ்த்தது என்று அருளிச் சுந்தரரை நினைப்பித்தார். கழறிற்றறிவார், தாம் திருமுடி சூட்டப்பெற்ற நாளில் உலா வந்த சமயம், வண்ணான் ஒருவன் உவர்மண் சுமந்துவர, அம்மண் மழையால் நனைந்து வழியப் பின் காய்ந்து வெண்ணிறமாகத் திகழக்கண்டு அவ்வண்ணானை வணங்கினார். வண்ணான் 'அடிவண்ணான்' எனக் கழறிற்றறிவாரும் 'அடிச்சேரன்' என்று கூறி, 'வார வேடம் நினைப்பித்தீர்; வருந்தாதேகும்' என்றார். ஒருசமயம் பாணபத்திரர் என்னும் சிவனடியாராகிய யாழ்ப்பாணர், ஆலவாய்ச் சொக்கேசர் அருளிய ''மதிமலிபுரிசை'' என்ற திருமுகப் பாசுரத்தைச் சேரமான் பெருமாள் நாயனாரிடம் கொணர்ந்து கொடுக்க, அதை நாயனார் ஏற்றுப் பாணபத்திரரை வணங்கி, அளவில் பெரும் செல்வம் அளித்து அனுப்பினார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளையானை மீதேறித் திருக்கயிலைக்குச் செல்லக் கழறிற்றறிவாரும் குதிரை மீதேறித் திருக்கயிலையினை அடைந்தார். [இவர் தில்லைக்குச்

சென்றபோது பொன்வண்ணத் தந்தாதி என்ற நூலையும், திருவாரூரில் திருவாரூர் மும்மணிக் கோவையும் பாடினர்; கயிலையில் இறைவன் திருமுன்பு அரங்கேற்றப் பெற்றதே திருக்கயிலாய ஞானவுலா].

## 39. கணநாத நாயனார்

பங்குனி மீ° திருவாதிரை நட்சத்திரம்

கந்தமலி வயற்காழி மறையோர் ஏத்தும்
    கணநாதர் திருத்தோணிக் கடவு ளார்க்கு
நந்தவனம் பலஅமைத்து மலருங் கொய்து
    நற்ருமஞ் சொற்ருமம் நயந்து சாத்தி
வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள் பூட்டி
    வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்து வாழ்த்திப்
புந்திமகிழ்ந்து அரனருளால் கயிலை மேவிப்
    பொருவில்கணத் தவர்காவல் பொருந்தி னரே. 43

கதைச் சுருக்கம்:

கணநாதர் சீகாழியில், திருத்தோணியப்பருக்குத் தொண்டுகள் செய்பவர்; இவர் நந்தவனம் முதலியன அமைத்தல், மலர்கள் கொய்தல், திருமாலைகள் தொடுத்தல் ஆகிய திருப்பணிகளைச் செய்யத் தொண்டர்களை ஈடுபடுத்துவார்; அவர்களுக்கு வேண்டிய கருவிகளை அளிப்பார்; மதுரையில் வாது செய்து வென்ற திருஞானசம்பந்தரது திருவடிகளை முப்போதும் வழிபட்டு வாழத்துவார்; திருக்கயிலை அடைந்து சிவ கணங்களுக்கு நாதர் ஆனர்.

# 40. கூற்றுவ நாயனார்

ஆடி மீ  திருவாதிரை நட்சத்திரம்

குன்றுத புகழானார் களந்தை வேந்தர்
கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டுசூடப்
பொன்றாழு முடிவேண்டப் புலியூர் வாழும்
பூசுரர்கள் கொடாதகலப் புனிதன் ஈந்த
மன்றாடுந் திருவடியே முடியாச் சூடி
மாநிலங்காத்து இறைவனுறை மாடக் கோயில்
சென்றாசை யுடன்வணங்கிப் பணிகள் செய்து
திருவருளால் அமருலகஞ் சேர்ந்து ளாரே 44

கதைச் சுருக்கம்:

கூற்றுவநாயனார் களந்தையில் வாழ்ந்த குறுநிலமன்னர். இவர் வேற்றரசர் பலரை வென்றவர்; திருமுடி தவிர்த்து அரசச்செல்வம் எல்லாவற்றையும் பெற்றவர். இவர் தமக்குத் திருமுடி புனைய வேண்டும் என்று தில்லைவாழந்தணர்களை வேண்டினர். அவர்கள் 'தொன்று தொட்டுவரும் சோழர்க்கன்றிப் பிறர்க்கு முடிசூட்டுவதில்லை' என மறுத்து, மணி மகுடத்தினை காவல் புரியும்படி ஒரு குடியினை மட்டும் தில்லையில் இருத்திச் சேரநாட்டுக்குச் சென்று விட்டனர். கூற்றுவ நாயனார் தில்லைக்கூத்தப் பெருமானை வேண்ட எம்பெருமான் தமது திருவடிகளையே திருமுடியாகச் சூட்டினர். நாயனரும் தனியரசு புரிந்து, இறைவன் உறையும் திருக்கோயில்கள் பலவற்றினையும் வணங்கிப் பணிகள் பலசெய்து, திருவருள் பெற்றுச் சிவபெருமான் திருவடிகளை அடைந்தார்.

## 41. பொய்யடிமையில்லாத புலவர்

பங்குனி மீ  ஆண்டு நிறைநாள்

பொய்யறியாக் கபிலரொடு பரண ராதிப்
புலவோர்பொற் பார்கலைகள் பொருந்த ஓதிச்
செய்யுளிடை வளர்ஆ மதுரம் நல்ல
சித்திரம்வித் தாரம்எனத் தெரிக்குஞ் செம்மை
மெய்யுடைய தொடைகளெல்லாம் மன்றுள் ஆடல்
மேவியகோன் இருதாளில் விரவச் சாத்திக்
கையுடையஞ் சலியினராய் அருளால் மேலைக்
கருதரிய அமருலகங் கைக்கொண் டாரே. 45

கதைச் சுருக்கம்:

கபிலர் பரணர் முதலாய பெரும்புலவர்கள் சிறந்த கலைகள் எல்லாவற்றையும் ஓதியறிந்தவர்கள்; ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் எனும் நாற்கவிகளும் பாடுதலில் வல்லவர்கள். சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் ஆடும் கூத்தப் பெருமான் திருவடிகளையே பாடித் துதித்து வணங்குபவர்கள் –இவர்களே பொய்யடிமை யில்லாத புலவர்கள் எனப் பெயர் பெற்றுச் சிவபதம் அடைந்தார்கள்.

## 42. புகழ்ச்சோழ நாயனார்

ஆடி மீ  கார்த்திகை நட்சத்திரம்

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார் சோழர்
போதகம்போல் என்னுயிரும் போக்கும் என்றே
அழலவிர்வாள் கொடுத்துபிரான் அதிகை மான்மேல்
அடர்ந்துபெரும் படைஏவ அவர்கொண் டேய்ந்த

தழல்விழிகொள் தலைகாண்பார் கண்ட தோர்புன்
சடைத்தலையை முடித்தலையால் தாழ்ந்து வாங்கிச்
சழல்பரவி அதுசிரத்தின் ஏந்தி வாய்ந்த
கனல்மூழ்கி இறைவனடி கைக்கொண் டாரே. 46

கதைச் சுருக்கம்:

புகழ்ச் சோழர், சோழ அரசர்களுள் ஒருவர். இவர், ஒரு சமயம் கொங்கு நாட்டுக் கருவூரில் அரசு வீற்றிருந்தார். அப்பொழுது ஒருநாள் சிவகாமி ஆண்டார் என்னும் அடியவர் கருவூர் ஆனிலைப் பெருமானுக்குத் திருப்பள்ளித் தாமம் எடுத்துச் சென்று கொண்டிருந்தார். அரசரது பட்டத்து யானை அப்பூங்கூடையைப் பறித்துச் சிதறியது. எறிபத்த நாயனர் கோபமுற்று யானையைப் பாகருடன் கொன்ருர். அரசர் யானையைக் கொன்றவன் ஒரு பகைவன் என நினைத்துச் சினந்து வந்தார்; அடியாரைக் கண்டார்; அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர்; தமது வாளைக் கொடுத்துத் தம்மையும் கொல்லுமாறு வேண்டினர்; ஒரு தடவை பகைவனுகிய அதிகமானுடன் இவர் போர் தொடுத்தரர். போரில் வென்ற இவரது சேனை வீரர்கள் அதிகனது சேனைவீரர்களின் தலைகளை வெட்டிக் கொணர்ந்தார்கள். கொணர்ந்த தலைகளுள் ஒன்றில் சிறிய சடை இருப்பதனை அரசர் கண்டார்; 'இது சிவனடியார் தலையாயிற்றே; அடியவரைக் கொன்ற பாவம் என்னைச் சாருமே' என்று வருந்தினர்; சடையுள்ள தலையை ஒரு பொற்றட்டில் ஏந்தித் தன் தலையில் தாங்கினர்; தீ வளர்த்து வலம் செய்து திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டு அத்தீயில் இறங்கினர்; இறைவன் திருவடி நீழலை அடைந்தார்.

## 43. நரசிங்கமுனையரைய நாயனார்

புரட்டாசி மீ சதயம் நட்சத்திரம்

நாடுபுகழ் முனைப்பாடி நாடு மேய
நரசிங்க முனையர்புலி நயந்து மன்றுள்
ஆடுமவர் ஆதிரைநாள் அடியார்க்கு அம்பொன்
அமுதளிப்பார் ஒளிவெண்ணீறு அணிந்து தூர்த்த
வேடமுடை யவர்க்குஇரட்டிச் செம்பொன் ஈந்து
விடுத்தழகார் ஆலயங்கள் விளங்கச் செய்து
தோடலர்தா ருடையபிரான் அருளை யாளத்
தோன்றினர் எனைஅருளின் ஊன்றி னரே. 47

கதைச் சுருக்கம்:

நரசிங்கமுனையரையர் திருமுனைப்பாடி நாட்டின் குறுநில மன்னர். இவர் திருவாதிரை தோறும் அடியார்களுக்கு அமுது செய்வித்து நூறு பொன்னும் கொடுத்து வந்தார். ஒருநாள் காமக்குறி மிகுந்து விபூதி பூசிய தொண்டர் ஒருவர் வந்தார்; அவரை நாயனர் எதிர்சென்று வரவேற்று உபசரித்து அவர்க்கு இருநூறு பொன் கொடுத்தார்; திருக் கோயில்களை விளங்கச் செய்தார்; சிவபெருமான் திருவருளைப் பெற்றார்.

## 44. அதிபத்த நாயனார்

ஆவணி மீ ஆயில்யம் நட்சத்திரம்

அலையாருங் கடல்நாகை நகருள் வாழும்
அதிபத்தர் பரதவர்கள் அதிபர் வேலை
வலைவாரி வருமீனில் தலைமீன் ஈசன்
வார்கழற்கே என்றுவிடும் மரபார் பன்னாள்

தலையான தொருமீனே சார நாளும்
தந்தொழிலால் விடுத்துமிடி சாரச் செம்பொன்
நிலையாரும் மணிநயந்த மீன்ஒன்று எய்த
நீத்தருளால் இறைவனடி நேர்ந்து ளாரே. 48

கதைச் சுருக்கம்:

அதிபத்தர் நாகப்பட்டினத்தில் பரதவர் குலத்தில் பிறந்து அவர்களுக்குத் தலைவராய் விளங்கியவர்; மீன் பிடிக்குங்கால் முதலில் கிடைக்கும் மீனைச் சிவபெருமானுக்கென்று இவர் விட்டு வருவது வழக்கம். (இறைவன் ஆணையால்) பல நாட்களும் ஒவ்வொரு மீனே இவருக்குக் கிடைத்தது; கிடைத்த அவ்வொரு மீனைச் சிவபெருமானுக்கே கடலின் கண் விட்டு விடுவார். அதனால் அதிபத்தர் வறுமையுற்றார். ஒருநாள் பொன்மீன் ஒன்றே கிடைத்தது. அதனையும் நாயனார், 'சிவபெருமான் திருவடிகளுக்கே சென்று சேர்க' என்று கடலில் விடுத்தார்; அப்பொழுது சிவபெருமான் விடைமேல் எழுந்தருளிக் காட்சி அளித்தார். அதிபத்தர் நிலமுற வீழ்ந்து வணங்கிச் சிவன் அருள் பெற்றுத் திருவடி சேர்ந்தார்.

## 45 கலிக்கம்ப நாயனார்

### தை மீ ரேவதி நட்சத்திரம்

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந் தொல்லைக்
கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பர் அன்பர்க்கு
அடிமையுற அமுதளிப்பார் அடியான் நீங்கி
அருளுருவாய் அன்பருடன் அணைய ஏத்தி
இடையிலவர் அடியணையும் விளங்கோ நிற்ப
இகழ்மனைவி கரகமலி இரண்டு கையும்
படியில்விழ எறிந்துஅவள்செய் பணியுந் தாமே
பரிந்துபுரிந்து அரன்அருளே பற்றி னாரே. 49

கதைச் சுருக்கம்:

கலிக்கம்பர், நடுநாட்டில் திருப் பெண்ணு கடத்திலே வணிகர் குலத்தில் தோன்றியவர். இவர் நாடோறும் சிவனடியார்க்கு அமுதளிப்பார். ஒருநாள் இவரிடம் பணி செய்து வந்தவன், இவரைவிட்டு, அடியார்களுள் ஒருவராகி வந்தார். அவருடைய திருவடிகளை விளக்கும் போது, நீர் வார்க்கும் இவரது மனைவியார், 'அடியவராக வந்தவர், நம்மிடம் வேலையிலமர்ந்து நீங்கியவராயிற்றே' என்று கருதி நீர் வார்த்தலைத் தாமதித்தார். நாயனர், கோபங்கொண்டு அம்மையாரின் இரு கைகளையும் வெட்டினர்; பிறகு தாமே அம்மையாரின் பணியும் செய்தார்; அடியார்களை அமுது செய்வித்தார். இங்ஙனம் பெருமை வாய்ந்த நாயனர் திருத் தொண்டு செய்து சிவனருள் பெற்றார்.

## 46. கலிய நாயனார்

### ஆடி மீ கேட்டை நட்சத்திரம்

தடமதில்சூழ் ஒற்றியூர் நகருள் வாழும்
    சக்கரப்பா டியர்குலமெய்த் தவமாய் உள்ளார்
படர்புகழார் கலியனுர் நலியுங் கூற்றைப்
    பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவால் மற்றோர்
உடலிலராய்ச் செக்குழல்வார்க்கு அதுவும் நேராது
    உயர்மனைவி யைக்கொள்வார் உளரும் இன்றி
மிடறுதிரம் அகல்நிறைய அரிய நாதன்
    வியன்கைகொடு பிடிப்பஅருள் மேவி ஞரே. 50

கதைச் சுருக்கம்:

தொண்டை நாட்டு ஒற்றியூரில் செக்கார் குலத்தில் பிறந் தவர், கலியனர். இவர் திருக்கோயில் முழுவதும் திருவிளக்கு

ஏற்றி வந்தார். இறைவன் திருவருளால் நாயனார் வறுமை யுற்ருர்; ஆகவே செக்கு ஆட்டிக் கூலிவாங்கி விளக்கேற்றி னார். நாயனார்க்குக் கூலித்தொழிலும் கிடைக்கவில்லே. தன் மனைவியையும் விற்கத் துணிந்தார், நாயனார். வாங்குபவர் ஒருவருமில்லே. விளக்கேற்றும் நேரத்தில் அகல் நிறைய இரத்தம் ஊற்றக் கருதினார்; உடனே தம் கழுத்தை அரியத் தொடங்கிஞர். இறைவன் அவர்கையைப் பிடித்துத் தடுத்துக் காட்சி அருளித் தம்முடைய திருவடி நீழலிகே சேர்த்துக் கொண்டார்.

## 47. சத்தி நாயனார்

### ஐப்பசி மீ பூசம் நட்சத்திரம்

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சை யூர்வாழ்
வேளாளர் சத்தியார் விமலர் பாதத்து
உரியவர்கள் அடிபரவும் ஒருமை யார்நா
ஓவாமே ஐந்தெழுத்தும் உரைக்கும் நீரார்
இருளின்மிட றுடையபிரான் அடியார் தம்மை
இகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கி வாங்கி
அரியுமது திருத்தொழிலா உடையார் மன்றுள்
ஆடியசே வடிநீழல் அடைந்து ளாரே. 51

கதைச் சுருக்கம்

சோழ நாட்டில் வரிஞ்சையூரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர், சத்தியார். இவர் சிவனடியார்களின் திருவடி களேப் பரவுவார்; இடையருது திருவைந்தெழுத்தை ஓதுபவர்; சிவனடியார்களே எவரேனும் இகழ்ந்தால் அவருடைய நாக்கைத் தண்டாயத்தினால் (குறட்டினால்) இடுக்கிக் கத்தி யினால் அறுப்பார்; இச்சத்தியால் சத்தியார் எனப் பெயர்

பெற்ருர்; இவ்வரிய தொண்டே செய்து சிவபத நீழலே அடைந்தார்.

## 48. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்

ஐப்பசி மீ˜ மூலம் நட்சத்திரம்

வையநிகழ் பல்லவர்தங் குலத்து வந்த
மாமணிமா நிலமுழுதும் மகிழ்ந்து காக்கும்
ஐயடிகள் காடவர்கோன் அருளால் நூல்கள்
அறிந்தரசு புரிந்திடுதல் அமையும் என்றே
பொய்யனைய உடல்வாழ்வு கழியு மாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பா புலியூர் மேவுஞ்
செய்யதிரு அவடிமுதலாப் பதிகள் தோறும்
செப்பினார் என்வினைகள் தப்பினாரே. 52

கதைச் சுருக்கம்:

ஐயடிகள் காடவர்கோன் காஞ்சிபுரத்தில் பல்லவர் குலத்தில் தோன்றியவர்; வடநூல்தென்தமிழ் முதலாம் பன்னுகலே பணி செய்ய அரசு புரிந்தவர்; இவ்வுடல் வாழ்வு நிலேயற்றதென அறிந்தார்; சிதம்பரம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்ருர்; ஒவ்வொரு தலத்துக்கும் ஒவ்வொரு வெண்பாப் பாடினார்; இங்ஙனம் திருத்தொண்டு செய்து சிவபெருமான் திருவடி அடைந்தார்.

## 49. கணம்புல்ல நாயனார்

கார்த்திகை மீ˜ கார்த்திகை நட்சத்திரம்

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால் வாழும்
இருக்கு வேளூர் அதிபர் எழிலார் சென்னிக்

கலைநிலவார் அடிபரவும் கணம்புல்லர் தில்லைக்
  கருதுபுலீச் சரத்தரற்குக் காதல் தீபம்
நிலைதாத்தாம் இடமிடியால் ஒருநாட் புல்லால்
  நீடுவிளக் கிடஅதுவும் நேரா தாகத்
தலைமயிரின் எரிகொளுவும் அளவில் நாதன்
  தாவாத வாழ்வருளும் தன்மை யாரே. 53

கதைச் சுருக்கம்:

கணம்புல்லர் வடவெள்ளாற்றுத் தென்கரையில் இருக்கு வேளூர் என்ற ஊரில் வாழ்ந்த பெருஞ் செல்வர். இவர் தில்லையில் திருப்புலீச்சரத்தில் (இளமையாக்கினர் கோயிலில்) அன்புடன் திருவிளக்கு இட்டுவந்தார். இவரது செல்வம் குறைந்தது; *கணம்புல். அரிந்துவிற்று நெய் விளக்கிடலாயினார். இதனால் இவர் கணம் புல்லர் எனப் பெயர்பெற்றார். ஒருநாள் கணம்புல் விலையாகவில்லை இவர் கணம் புல்லையே எரித்தார்; அது போதாதாயிற்று; தன் தலைமயிரையே எரிக்கலானார். உடனே சிவபெருமான் இவர்க்குத் திருவருள் செய்து தம் சிவலோகத்தில் இருக்க அருளினார்.

## 50. காரி நாயனார்

### மாசி மீ° பூராடம் நட்சத்திரம்

திருக்கடவூர் வருமுரவோர் காரி யாராம்
  திகழ்தொண்டர் வண்டமிழ்நூல் திருந்த ஓதி
விருப்பொடுதம் பெயரால்பா விளம்பி மும்மை
  வேந்தரையும் முறைமுறையே மேவி அங்கண்
உரைத்தவுரை நயமாக்கி அவர்பால் ஏய்ந்த
  ஒண்பொருளால் ஆலயங்கள் ஓங்கச் செய்து

* கணம்புல் - இஃது ஒரு வகைப் புல்; இது வீடு வேயப் பயன்படும்.

தரைக்கும் அருந் தவர்க்கேவல் தகமுன் போற்றும்
தன்மையால் அருள்சேர்ந்த நன்மை யாரே 54

கதை சுருக்கம்:

காரியார் திருக்கடவூரில் பிறந்தவர்; தமிழ் நூல்களைத் திருந்த ஓதியவர்; இவர் தம் பெயரால் ''காரிக் கோவை'' என்ற நூலை எழுதினர்; மூவேந்தரிடமும் சென்று அவர்கள் மகிழுமாறு பொருள் விளக்கி அவர்கள் கொடுத்த பொருளைப் பெற்று அப்பொருளால் சிவாலயங்களை ஓங்கச் செய்தார்; சிவனடியார்களுக்கு வேண்டுவன கொடுத்தார்; இங்ஙனம் சிவத்தொண்டு செய்து சிவனருள் பெற்றார்.

## 51. நின்றசீர்நெடுமாற நாயனார்
### ஐப்பசி மீ பரணி நட்சத்திரம்

கன்னல்மலி நெல்வேலிக் கவினுர் மாறர்
கவுரியர்கோன் அமணர்உறு கலக்க மெல்லாம்
பொன்னெயில்சூழ் சிரபுரக்கோன் அணைய மாற்றிப்
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்து
மன்னுபுகழ் மங்கையர்க் கரசியாரார்
மலர்மாது மணிமார்பின் மகிழ்ந்து மாற்றார்
வெநநிடுதல் கண்டரசு புரிந்து காழி
வேந்தரருள் சேர்ந்தபெரு விறலி னுரே. 55

கதைச் சுருக்கம்:

நெடுமாறர், பாண்டிய அரசர்; வடபுல மன்னரை நெல்வேலி* என்னுமிடத்தில் போரில் வென்றவர்; சமணச்

---

* இது. திருநெல்வேலி அன்று; புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள 'நென் மலி' என்ற ஊர் ஆகலாம் என்பர்.

சார்பினராயிருந்து, திருஞான சம்பந்தர் எழுந்தருளச் சிவ நெறியடைந்து புனிதத் திருநீற்றினை அணிந்தவர்; மங்கையர்க்கரசியாரை வாழ்க்கைத் துணையாகப் பெற்றவர். இவர் திருஞானசம்பந்தரது திருவருளைப் பெற்றுச் சைவம் தழைக்கச் செய்து செங்கோல் செலுத்திச் சிவனடி அடைந்தார்.

## 52. வாயிலார் நாயனார்

### மார்கழி மீ ரேவதி நட்சத்திரம்

ஞாயிலார் மதிற்றெண்டை நாட்டு மேன்மை
நண்ணுமயி லாபுரியின் வேளான் தொன்மை
வாயிலார் மலைவில்லான் அடியே போற்றி
மறவாமை தலைநின்ற மனமே செம்பொற்
கோயிலா உயர்ஞானம் விளக்கா நீராக்
குலவியஆ னந்தமன்பே அமுதாக் கொண்டு
தாயிலான் இருசரணம் நிகழ ஏத்தும்
தன்மையார் அருள்சேர்ந்த நன்மை யாரே. 56

கதைச் சுருக்கம்:

வாயிலார், தொண்டைநாட்டிலுள்ள திரு மயிலாப்பூரில் வேளாளர் குலத்தில் தோன்றியவர். இவர் சிவபெருமான் திருவடியை மறவாது போற்றுபவர். இவர் தம் மனத்தைச் செம்பொற்கோயிலாக்கினார்; அம் மனக்கோயிலில் உயர் ஞானத்தையே விளக்காக ஏற்றினார்; அங்கு இறைவனுக்கு ஆனந்தமாகிய திருமஞ்சனம் ஆட்டினார்; அன்பாகிய அமுதை நிவேதித்தார்; இங்ஙனம் இறைவனை நாளும் வழிபட்டுச் சிவபெருமான் திருவடிநீழல் சேர்ந்தார்.

## 53. முனையடுவார் நாயனார்

பங்குனி மீ    பூரம் நட்சத்திரம்

பொன்னிவளந் தருநாட்டுப் புகழும் நீடூர்ப்
    பொருவில்திரு மலிவேளாண் தொன்மை மிக்கார்
முன்னியவர் முனையடுவார் இகலார் போரின்
    முரண்அழிவார் தமக்காக மொழிந்த கூலி
மன்னுநிதி கொண்டுசயங் கொடுத்து வந்த
    வளர்பொருளால் இறைவனடி வழுவா அன்பர்க்கு
அன்னமவர் நசையின்மிக மிசைய நல்கும்
    அன்பர்துன்பம் அவையாவும் அகன்று ளாரே. 57

கதைச் சுருக்கம்:

முனையடுவார், சோழநாட்டுத் திருநீடூரில் வேளாண் குலத்து உதித்தவர்; போர் முனையில் பகைவரை வெல்லுவார். பகைவரை வெல்ல முடியாதவர், இவரது உதவியை நாடுவர். இவர் நடுநிலையில் நின்று ஆய்ந்து அதற்குக் கூலிபேசிப் போர்புரிந்து அவர் தம் பகைவரை வெல்லுவார்; அதனுல் முனையடுவார் எனப் பெயர் பெற்றூர். வெற்றியினுல் கிடைத்த பொருள் பெற்றுச் சிவனடியார்க்கு அன்னம் பாலிப்பார்; இங்ஙனம் தொண்டு செய்து இறைவன் திருவருளால் சிவபதம் அடைந்தார்.

## 54. கழற்சிங்க நாயனார்

வைகாசி மீ    பரணி நட்சத்திரம்

காடவர்தங் குலமுவந்த கழலார் சிங்கர்
    காதல்மிகு தேவியுடன் காவல் ஆரூர்
ஆடவல பெருமானைப் பணிவார் அங்கோர்
    அகன்றமலர் தனைமோந்த அரிவை மூக்கைச்

சேடுடைய செருத்துணையார் அரியக் கேட்டுத்
திறல்அரசர் மலர்எடுத்த செங்கை என்றே
சூடகமுன் கைதடிந்து ஞாலம் காத்த
தூய்மையார் அருள்சேர்ந்த வாய்மை யாரே. 58

கதைச் சுருக்கம்:

கழற்சிங்கர், காடவர் (பல்லவர்) குலத்து உதித்தவர். ஒரு சமயம் இவர் திருவாரூர்த் தியாகேசப் பெருமானைத் தரிசிக்க வந்தார். இவரது மனைவியார், கோயிலில் புட்ப மண்டபத்திற்கிடந்த பூவை மோந்தார். அதனைக் கண்ணுற்ற செருத்துணை நாயனூர் அவர் மூக்கை அரிந்தார். அரசர் போந்து நிகழ்ந்ததை அறிந்து, 'மலர் எடுத்தது செங்கை ஆதலால் அதனையும் துணித்தல் வேண்டும்' என்று கூறி அக்கையைத் தடிந்தார். பின்னர் கழற்சிங்க நாயனூர் பன்னெடுங்காலம் நிலவுலகம் காத்துச் சிவத்தொண்டு புரிந்து சிவபெருமான் திருவடி நீழலை அடையப் பெற்றூர்.

## 55. இடங்கழி நாயனார்

### ஐப்பசி மீ௴ கார்த்திகை நட்சத்திரம்

கோனாட்டுக் கொடும்பாளூர் இருக்கும் வேளிர்
குலத்தலைவர் இடங்கழியார் கொங்கிற் செம்பொன்
ஆனேற்றூர் மன்றில்முகடு அம்பொன் வேய்ந்த
ஆதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோர் அன்பர்
போநாப்பண் இருளின்கட் காவ லாளர்
புரவலர்முன் கொணரஅவர் புகலக் கேட்டும்
ஆனேற்றூர் அடியாரே கொள்க என்று
வழங்கிஅர சாண்டருளின் மன்னி னூரே. 59

கதைச் சுருக்கம்:

இடங்கழியார், கோனாட்டுக் கொடும்பாளூரில் வேளிர் குலத்தில் பிறந்த அரசர். பொன்னம்பலத்து முகட்டைக் கொங்கு நாட்டுச் செம்பொன்னால் வேய்ந்த ஆதித்தன்* குலத்து முன்னோராகிய இவர், அரசு செலுத்துங்கால் ஒரு சிவனடியார் நாடோறும் அன்னமளித்து வந்தார். ஒரு சமயம் அவர் அன்னம் அளித்தற்குப் பொருள் கிடைக்க வில்லை. நள்ளிரவில் அவர் இடங்கழியாரின் நெற்கூட்டி லிருந்து நெல்லைத் திருடினார்; காவலாளர் அவரைப் பிடித்துக் கொண்டு வந்து இடங்கழியார் முன் நிறுத்தினர். சிவவேடம் பூண்ட அவர், தாம் திருடியதற்குக் காரணம் கூற, இடங்கழியார் அவரை விடுவித்து, 'நெற்பண்டாரம் முழுவதும் சிவனடியார்கள் எல்லோரும் எடுத்துக்கொள்க' என்று எங்கும் பறையறைவித்தார். பின்பு பன்னாள் திரு நீற்று நெறி தழைக்கும்படி அரசாண்டு, சிவனடி சேர்ந்தார்.

## 56. செருத்துணை நாயனார்

ஆவணி மீ பூசம் நட்சத்திரம்

இரைத்தணையார் புனற்பொன்னி மருகல் நன்னாட்டு
எழிலாருஞ் தஞ்சைநகர் உழவ ரேத்துஞ்
செருத்துணையா திருவாரூர் சேர்ந்து வாழ்வார்
செல்வமிகும் பல்லவர்கோன் தேவி வீழ்ந்த
மருத்துணையார் மலரெடுத்து மோப்பக் கண்டு
வளமலிபூங் கத்தியால் அவள்மூக் கீர்ந்த
கருத்துணையார் விறல்திருத்தொண் டினையே செய்து
கருதலரும் அமருலகங் கைக்கொண் டாரே. 60

* ஆதித்தன — ஆதித்த சோழன்.

கதைச் சுருக்கம்

சோழநாட்டு மருகல் நாட்டுத் தஞ்சாவூரில் வேளாளர் மரபினில் வந்தவர் செருத்துணையார். இவர் திருவாரூரை யடைந்து திருத்தொண்டு புரிந்து வந்தார். ஒருநாள் கழற்சிங்க நாயனாருடைய மாதேவி பூமண்டபத்தில் கிடந்த பூவை எடுத்து மோந்தார்; அதனைக் கண்டு சினந்து அவருடைய மூக்கை அறுத்தார். இத்தகைய திருத்தொண்டு செய்து சிவபதம் அடைந்தார்.

## 57. புகழ்த்துணை நாயனார்

### ஆவணி மீ ஆயில்யம் நட்சத்திரம்

புண்ணியர்கள் புகழ்அழகார் திருப்புத் தூர்வாழ்
புகழ்த்துணையார் அகத்தடிமைப் புனிதர் சின்னாள்
மண்ணிகழ மழைபொழியா வற்கா லத்தால்
வருந்துடலம் நடுங்கிடவும் மணிநீர் ஏந்தி
அண்ணல்முடி பொதிகலசம் முடிமேல் வீழ
அயர்ந்தொருநாட் புலம்பஅரன் அருளால் ஈந்த
நண்ணலரும் ஒருகாசுப் படியால் வாழ்ந்து
நலமலிசீர் அமருலகம் நண்ணி னாரே. 61

கதைச் சுருக்கம்:

புகழ்த்துணை நாயனார், சோழ நாட்டுச் செருவிலி புத்தூரில் ஆதிசைவர் குலத்தில் பிறந்தவர். இவர் சிவ பெருமானை முறைப்படி பூசை செய்பவர். ஒரு சமயம் பஞ்சம் வந்தது. நாயனார் உணவின்றி வருந்தினார். கோயிலில் திருமஞ்சனம் ஆட்டும்போது, திருமஞ்சனக் குடத்தைத் தூக்க முடியாமையினால், குடம் இறைவன் திருமுடிமேல் வீழ்ந்தது. நாயனார் மிகவும் வருந்தினார்; அன்று முதல் இறைவன்

நாடோறும் பீடத்தின் கீழ் ஒரு படிக்காசு வைக்க அதனைப் பெற்று, அகம்படித் தொண்டு* செய்து, வாழ்ந்து வந்தார்; பின்பு சிவபெருமான் திருவடி நீழலையடைந்தார்.

* அகம்படித்தொண்டு - இறைவன் திருமேனி தீண்டுதல், திருமஞ்சனம் எடுத்தல், அலங்கரித்தல் முதலிய தொண்டு.

## 58. கோட்புலி நாயனார்

### ஆடி மீ' கேட்டை நட்சத்திரம்

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவே ளாளர்
கோட்புலியார் குவித்துயர்த்த செந்நெற் கூடு
நிலவணிவார்க்கு அமைத்துஆணை நிறுத்தி ஒன்னார்
நேர்மலைவார் திருவாணை நினையா தேநெல்
சிலமிடியால் அழித்தபடி அறிந்து வாளால்
சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதற வீசி
இலகுமொரு குழவியையும் எறிந்து நாதன்
எண்ணரிய கருணைநிழல் எய்தி னாரே. 62

கதைச் சுருக்கம்:

கோட்புலியார், சோழநாட்டுத் திருநாட்டியத்தான் குடியில் வேளாளர் மரபில் பிறந்தவர்; சோழ மன்னரது சேனைத் தலைவர். இவர் திருக்கோயில்களில் அமுது படிக்காக நெல்லைச் சேமித்து வைத்தார்; ஒரு சமயம் போர் மேற்செல்லும் போது, சுற்றத்தாரை அழைத்து, ''இந்நெல்லை எக்காரணம் கொண்டும் எடுக்கக் கூடாது; திருக்கோயிலுக்கே செலவிட வேண்டும்; திருவிரையாக்கலி*'' என்று ஆணை கூறிச் சென்றார். சில நாட்களுக்குப் பின் பஞ்சம் வந்தது. சுற்றத்

* திருவிரையாக்கலி - இறைவன்மேல் ஆணை. விரையாக்கலி - ஆணை உறுதிமொழி.

தார், ஆணையையும் மீறி அந்நெல்லைப் பயன்படுத்திக் கொண்டனர். போர் மேற் சென்றவர் வாகைசூடி மீண்டார்; நடந்ததை அறிந்தார்; யாவரையும் ஒருங்கு கூட்டினார்; நெல்லை உண்டவர் எல்லோரையும் கொன்றார்; எஞ்சியிருந்தது ஒரு குழந்தை; அக்குழந்தையும் அந்நெல்லுணவை யுண்ட தாயின் பாலைக் குடித்ததால் அதனையும் வாளுக்கு இரை யாக்கினார். இறைவன் யாவர்க்கும் திருவருள் சுரந்து தம் சிவலோகத்திற்கு அழைத்துக் கொண்டார்.

## 59. பத்தராய்ப் பணிவார்

பங்குனி மீ ஆண்டு நிறை நாள்

தொண்டரடித் தொழல்பூசைத் தொழில்மகிழ்தல் அழகார்
துளங்கியஅர்ச் சனைபுரிதல் தொகுதி நியமங்கள்
கொண்டபணி திருவடிக்கே கொடுத்தல் ஈசன்
குணமருவும் அருங்கதையைக் குலவிக் கேட்டு
மண்டிவிழி துளும்பல்மயிர் சிலும்பல் உன்னல்
மருவுதிருப் பணிகாட்டி வருப வாங்கி
உண்டிகொளா தொழிதல்என இவையோர் எட்டும்
உடையர் அவர் பத்தர்என உரைத்து ளாரே. 63

கதைச் சுருக்கம்:

சிவனடியார்களைத் தொழுதல்; சிவபூசைதனைக் கண்டு மகிழ்தல்; சிவார்ச்சனை புரிதல்; சிவபெருமானுக்கே நியமத் தொண்டுகள் புரிதல்; சிவசரிதங்களைக் கேட்டல்; சிவபெருமானைத் தியானித்து மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார்தல்; (நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும் மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்) எப்போதும் சிவனடியே சிந்தித்து நிற்றல்; திருப்பணிகள் செய்தற்குப் பொருள் பெறின் (அவற்றைப் பிறர்போல் உண்

டொழியாது) அப்பொருள் முழுதுங்கொண்டு திருப்பணிகள் செய்தல் — இவ்வெட்டும் பத்தராய்ப் பணிவார்கள் தம் செயல்களாம்.

## 60. பரமனையே பாடுவார்

பங்குனி மீ° ஆண்டு நிறைநாள்

அருந்தமிழால் வடகலையால் அருளால் ஒன்றால்
அறநெறி மருவும்அருங் கவிகள் யாவும்
திருந்தியவா னவர்பணிய மன்றுள் ஆடுந்
தேவர்பிரான் கழலிணையே சேர ஓதி
விருந்திடுநா வுடையபயன் மேவி னோர்தாம்
மேலானோம் எனமகிழ்ந்து விழிநீர் சோரப்
பரிந்தருளால் பரமனையே பாட வல்ல
பான்மையார் எமையாளும் மேன்மை யாரே. 64

கதைச் சுருக்கம்:

தென்தமிழ், வடமொழி ஆகிய மொழிகளைப் பயின்று, 'நாவினாற் பயன் பரமனை மனமுருகிப் பாடுதலே; அங்ஙனம் பாடியதால் மேன்மையடைந்தோம்' என்று மகிழ்ந்து, கண்ணீர்வார, மிக்க மெய்யன்போடு உள்ளுருகிச் சிவபெருமானை நாளும் இடைவிடாமல் பாடும் மெய்யடியார்கள் பரமனையே பாடுவார் எனப்பெறுவர்.

## 61. சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்

பங்குனி மீ° ஆண்டு நிறைநாள்

பாரணவும் புலன்அந்தக் கரணம் ஒன்றும்
படராமே நடுநாடி பயிலு நாதம்
காரணபங் கயன்முதலாம் ஐவர் வாழ்வும்
கழியுநெறி வழிபடவுங் கருதி மேலைப்

பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவு நோக்கிப்
புணர்ந்தணைந்த சிவாநுபவ போகம் மேவுஞ்
சீரணவும் அவரன்றே எம்மை யாளும்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்து ளாரே. 65

கதைச் சுருக்கம்:

''அநித்தியமான உலகப்பற்று முற்றும் அற்றுப் பரம சிவனையே பற்றி நின்று, பிராணவாயு இடைபிங்கலை வழிச் செல்லுதல் மாற்றிச் சுழுமுனை வழியே மேலேற்றி, ஆறு தாரங்களுங் கண்டு, மூலதாரக் கணேசரருள் பெற்று, மற்றை ஐந்து ஆதாரங்களின் அதிதெய்வங்களை வழிபட்டு மேற் சென்று, பிரமரந்திரத்தின் மேல் ஆயிரத்தெட்டிதழ்த் தாமரை மீது நடிக்கும் திருநடங்கண்டு சிலம்பு ஒலிகேட்டு, ஆனந்த அமுதுண்டு, சிவமணமே உயிர்த்துச் சிவத்துடன் உற்று வாழும் நிலை வழுவாது பாவித்து நிற்பவர்களே, சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் என்று சொல்லப்பெறுவர்'' - (திருத் தொண்டர் புராண சார விளக்கம்-பக்கம், 220-காரைக்குடி, ராம. சொ. சொக்கலிங்கஞ் செட்டியார்).

## 62. திருவாரூர்ப் பிறந்தார்

பங்குனி மீ˝ ஆண்டு நிறைநாள்

பொங்கியமா தவமுடையார் வருண நான்கிற்
பொருந்தினர்கள் அல்லாத புகழின் உள்ளார்
சங்கையிலா அருந்தவமுன் புயந்தார் இங்குச்
சார்விலார் இறைவன்அருள் சார்த லாலே
கங்கைவாழ் சடைமுடியான் அருளை நீங்காக்
கணநாதர் எனவாழுங் கருத்தர் கன்னிச்
செங்கண்வரால் வளர்வாவி திகழும் ஆரூர்ச்
சிறந்துளார் எமைஆளப் பிறந்து ளாரே. 66

கதைச் சுருக்கம்:

திருவாரூர் பிறந்தவர்கள் மிக்க தவம் உடையவர்; நான்கு வருணத்திற் பொருந்தியவர்; மிகா புகழுடையவர்; முன்னர்ச் செய்த தவச்சார்பு உடையவர்; உலகச்சார்பு இல்லாதவர்; இறைவனருள் சார்ந்தவர்; சிவனருள் நீங்காதவர்; யாவரும் சிவகணநாதர்கள் ஆவர்.

## 63. முப்போதுந் திருமேனி தீண்டுவார்
### பங்குனி மீ' ஆண்டு நிறைநாள்

செப்பலருந் தவமுடைய செம்மை யாளர்
சிறுகாலே மலர்வாவி திகழ மூழ்கி
ஒப்பில்திரு நீறணிந்து நியதி யாற்றி
ஓவாமே ஐந்தெழுத்தும் உரைத்து மேன்மைத்
தப்பில்சிவா கமவிதியால் இன்பால் அன்பாந்
தன்மையால் நன்மையாம் தகையார் என்றும்
முப்பொழுதும் திருமேனி திண்ட வல்ல
முறைமையார் பிறவிதெறும் திறமை யாரே. 67

கதைச் சுருக்கம்:

முப்போதும் திருமேனி திண்டுவார்,* அருந்தவமுடையவர்; செம்மையாளர்; விடியற்காலையில் திருக்குளத்தில் நீராடித் திருநீறணிந்து, நித்திய நியமங்களை முடித்துத் திருவைந்தெழுத்து ஓதிச் சிவாகம விதிப்படி, இன்ப அன்போடு, சிவலிங்காதி திருமேனியினை முப்போதும் தீண்டிப் பூசனை புரிபவர்.

---

* முப்போதும் திருமேனி தீண்டுவார் - இவர்கள் ஆதி சைவர்கள் ஆவர்.

## 64. முழுநீறு பூசிய முனிவர்

### பங்குனி மீ ஆண்டு நிறைநாள்

கற்பம்அநு கற்பம்உப கற்பம் என்றிக்
கடன்அணைந்த திருநீறும் கனற்கண் நீறும்
பொற்புடைய அரன்ஆசான் அங்கி ஆறு
பொல்லாத பூமியெதிர் புனைதல் ஆகா
அற்புதமாந் திரிபுண்ட மதியின் பாதி
அகிலாங்கந் தீபமிகும் அழகார் வட்டம்
முற்பொலிய உடல்அணியும் முறையார் அன்றே
முழுநீறு பூசவல்ல முனிவர் தாமே. 68

கதைச் சுருக்கம்:

கற்பம், அநுகற்பம், உபகற்பம் என்ற மூவகைப்படும் விபூதியையேனும் சிவாக்கினியில் எடுத்த விபூதியையேனும் தரிக்கலாம். ஆனால் சிவசம்நிதி முன்பும், குருவின் முன்னிலையிலும், ஓமத் தீயின் முன்பும், நடக்கும் வழியிலும், தூய்மையற்ற இடங்களிலும் திருநீறு அணியலாகாது. திருநீற்றைத் திரிபுண்டரமாகவேனும், உத்தூளனமாக வேனும், பிறை வடிவாகவேனும், தீப வடிவாகவேனும், வட்ட வடிவாகவேனும் அணிய வேண்டும். இத்திருநீற்றினைத் திருமேனி முழுவதும் பூசுபவரே, முழுநீறு பூசிய முனிவர் எனப்படுவர்.

## 65. அப்பாலும் அடிச்சார்ந்தார்

### பங்குனி மீ ஆண்டு நிறைநாள்

தாராரும் மூவேந்தர் பயிலுந் தொல்லைத்
தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ் சார்ந்த
சீராருந் தொண்டர்களும் அண்டர் ஏத்தும்

திருத்தொண்டத் தொகைஅருளால் செப்புங் காலத்து
ஏராருந் தொடையிலுரு (து) இப்பால் அப்பால்
எந்தைபிரான் அடியடைந்த இயல்பி னோரும்
ஆராத காதலுடை யவர்கள் அன்றே
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார் தாமே. 69

கதைச் சுருக்கம்:

சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தருக்கும் உரிய தமிழ் வழங்கும் நாடுகளுக்கு அப்பாலுள்ள நாடுகளில் தோன்றிச் சிவபெருமான் திருவடியடைந்தவர்களும், திருத்தொண்டத் தொகையைச் சுந்தரர் சிவபெருமான் திருவருளால் செய்யும் காலத்து அத்திருப்பாடல்களில் துதிக்கப் பெறுமல் அக்காலத்துக்கு முன்னும் பின்னும் சிவபெருமான் திருவடியைச் சார்ந்தவர்களும் — அப்பாலும் அடிச்சார்ந்தார் என்று கூறப்பெறுவர்.

## 66. பூசலார் நாயனார்

ஐப்பசி மீ அனுஷம் நட்சத்திரம்

பொருவருந்தொண் டகநாட்டு நின்ற வூர்வாழ்
பூசுரர்கோப் பூசலார் புந்தி யாலே
இருநிதியம் தேடிஆ லயமும் ஆக்கி
எழுந்தருளப் பண்ணுவதா எண்ணுங் காலை
அரனதனைக் காடவர்கோற்கு அருள மன்னன்
அந்நகரம் அணைந்(து) அவ்வா(று) அறிந்து தாழ
விரவுமனக் கோயிலுற இருத்தி அங்கண்
வேண்டுவகொண்டு இறைஞ்சியருள் மேவி னாரே. 70

கதைச் சுருக்கம்:

தொண்டை நாட்டுத் திருநின்றவூரில் மறையவர் குலத்தில் தோன்றியவர் பூசலார். இவர் மனத்தினாலேயே

பொருள் தேடி மனத்தினாலேயே சிவபெருமானுக்கு ஒரு கோயிலைக் கட்டினார்; தம் மனக்கோயிலுள் சிவபெருமானை எழுந்தருளச் செய்ய நன்னாளும் குறித்தார். அந்நாளில் பல்லவ அரசனாக இருந்தவனும், காஞ்சீபுரத்தில் (கைலாச நாதர்) கோயில் கட்டி பூசலார் குறிப்பிட்ட நாளிலேயே இறைவனை எழுந்தருளச் செய்ய இருந்தான். இறைவன், பல்லவ அரசனுக்குத் தான் பூசலார் கோயிலில் அந்நாளில் எழுந்தருளுவதாகவும், இன்னொரு நாளில் அரசன் கட்டிய கோயிலில் எழுந்தருளுவதாகவும், கனவில் அருளினார். அரசன் திருநின்றவூர்க்குச் சென்றான்; பூசலார், மனக் கோயில் கட்டிய மாதவர் என்பதை அறிந்தான்; அவரை வணங்கிச் சென்றான். பூசலாரும் தம் மனக்கோயிலுள் சிவ பெருமானை எழுந்தருளச் செய்து நித்திய நைமித்திய பூசை களை நடத்தினார்; இங்ஙனம் பன்னாள் வழிபாடு செய்து சிவபெருமான் திருவடி சேர்ந்து இன்புற்று இருந்தார்.

## 67. மங்கையர்க்கரசியார்

சித்திரை மீ° ரோகிணி நட்சத்திரம்

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக் கொழுந்து
    மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவி யார்மண்
சங்கைகெட அமண்சமயஞ் சாட வல்ல
    சைவசிகா மணிஞானத் தமிழில் கோத்த
பொங்குதிரு வருளுடைய போத வல்லி
    பொருவில்நெடு மாறனார் புயமேல் வாழும்
செங்கலச முலையாள்தன் அருளால் இன்பஞ்
    சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்த வாறே. 71

கதைச் சுருக்கம்!

மங்கையர்க்கரசியார், மணிமுடிச் சோழன் என்னும் சோழ மன்னனின் மகளாவர்; கூன் பாண்டியன் என்ற பாண்டிய அரசனுக்கு மனைவியாவர். இவர், பாண்டியநாட்டினின்று சமண் நீங்கவும் சைவம் ஓங்கவும் செய்தவர்; திருஞான சம்பந்தரால் புகழ்ந்து பாடப்பெறும் திருவருட் செல்வம் உடையவர்; கூன் பாண்டியன் கூன் நீங்கி நெடுமாறனாகத் திகழத் திருநீற்று நெறி வளர்த்தவர்; தன் கணவரோடு சிவபதம் அடைந்தவர்.

## 68. நேச நாயனார்

பங்குனி மீ ரோகிணி நட்சத்திரம்

சாலியர்கோக் காம்பீலித் தலைவர் மேன்மை
தாவாத புகழ்நேசர் தஞ்சொல் என்றுங்
கோலியஐந் தெழுத்தோதிச் சிந்தை யுன்னிக்
கொண்டபொருள் அன்பர்கொளக் கொடுத்து வாழ்வார்
சீலமிகு திருத்தொண்டர்க்கு உடையும் நீளும்
திருந்தியவெண் கோவணமும் சேர ஈந்து
பாலனைய ஒளிநீற்ருன் பாதம் ஏத்திப்
பரலோகம் முழுதாண்ட பான்மை யாரே. 72

கதைச் சுருக்கம்:

நேச நாயனுர், காம்பிலி நகரத்தவர்; சாலியர் குலத்தவர். இவர் தம்மனத்தால் சிவபெருமானை நினைப்பார்; வாக்கால் திருவைந்தெழுத்து ஓதுவார்; கையால் அன்பர்களுக்குப் பொருள் கொடுத்து உதவுவார். இவர் திருத்தொண்டர்களுக்கு உடையும், சீளும், கோவணமும் வேண்டும்

போதெல்லாம் கொடுத்து, நாடோறும் அவர்களை வணங்கித் துதித்துச் சிவபெருமான் திருவடி நீழல் அடைந்தார்.

## 69. கோச்செங்கட் சோழ நாயனார்

### மாசி மீ சதயம் நட்சத்திரம்

வெண்ணாவல் இறைக்கொளிநூற் பந்தர் செய்த
    வியன்சிலம்பி அதுஅழித்த வெள்ளா னைக்கை
உண்ணாடிக் கடித்தவுடல் ஒழியச் சோழன்
    உயர்குலத்துச் சுபதேவன் கமலத் தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கட்
    பெருமானாய்த் தென்னவராய்ப் பெருங்கோயில் பலவுங்
கண்ணார்வித்து உயர்தில்லை மறையவர்க்கு உறையுள்
    கனகமய மாக்கியருள் கைக்கொண் டாரே. 73

கதைச் சுருக்கம்:

திருவானைக்காவில், ஒரு சிலந்தி வெண் நாவற்கீழிருந்த இறைவனுக்குப் பந்தரிட்டு வந்தது. அங்கு ஒரு வெள்ளை யானை சிவபெருமானைப் பூசிக்க வரும்; அப்பந்தரை அழித்துப் பூசை செய்யும்; இங்ஙனம் பன்னாட்கள் பூசை நடைபெற்றது. ஒருநாள் சிலந்தி யானையின் துதிக்கையில் புகுந்து கடிக்க யானை இறந்தது; சிலந்தியும் இறந்தது. இறந்த சிலந்தியைச் சிவபெருமான், சோழநாட்டில் சோழ அரசனாகப் பிறக்குமாறு திருவருள் சுரந்தார். அங்ஙனமே சிலந்தி சோழ அரசன் சுபதேவனது மனைவி கமலவதி வயிற்றில் பிறந்து கோச்செங்கட் சோழன் எனப் பெயரிடப் ெற்றது. கோச்செங்கட் சோழர் அரசோச்சும் நாளில் சோழ நாட்டில் மாடக் கோயில்கள் பல கட்டுவித்தார்; தில்லை நடராசப் பெருமானை வழிபட்டுத் தில்லை வாழந்தணர்க்குத்

திருமாளிகைகள் கட்டியளித்தார்; பின்பு இறைவன் திருவருள் பெற்ருர்.

## 70 திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்

### வைகாசி மீ மூலம் நட்சத்திரம்

பிறங்குஎருக்கத் தம்புலியூர் வாழும் பேரியாழ்
பேணிதிரு நீலகண்டப் பாண ஞர்சீர்
திறந்தருசெம் பொற்பலகை ஆலவாயின்
நிமலன்பாற் பெற்றுஆரூர் நேர்ந்துசிவன் வாயில்
திறந்தருளும் வடதிசையே சேர்ந்து போற்றித்
திருஞான சம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி
அறந்திகழும் திருப்பதிகம் யாழில் ஏற்றி
ஆசில்திருப் பெருமணஞ்சேர்ந்து அருள்பெற் ருரே. 74

கதைச் சுருக்கம்:

நடுநாட்டிலே திருஎருக்கத்தம் புலியூரில் பாணர் மரபில் தோன்றியவர், திருநீலகண்ட யாழ்ப்பாணர். இவர் மதுரையில் சிவபெருமான் திருவருளால் பொற்பலகை பெற்று அதன்மேனின்று யாழ் வாசித்து வந்தார்; பின் திருவாரூர் சென்று, வடதிசையில் புதிய ஒருவாயில் திறப்பிக்க அதன் வழி சென்று இறைவனை வழிபட்டார்; பின்னர்ச் சீகாழியடைந்து, திருஞானசம்பந்தர் திருவடிகளை வாழ்த்தி, அவர் பாடும் திருப்பதிகங்களை யெல்லாம் தம் யாழில் உடன் அமைத்து வாசித்து வந்தார்; திருநல்லூர்ப் பெருமணத்தில் திருஞானசம்பந்தர் அருளால் சிவசோதியிற் கலந்தார்.

## 71. சடையனுர்

### மார்கழி மீ திருவாதிரை நட்சத்திரம்

சங்கையிலா வரன்முறையோர் நாவ லூர்வாழ்
தவரதிபர் தம்பிரான் தோழ ராய

எங்கள்பிரான் தவநெறிக்கோர் இலக்கு வாய்த்த
இசைஞானி யார்தனயர் எண்ணார் சிங்கம்
மங்கையர்கள் தொழும்பரவை மணவாள நம்பி
வந்துதிக்க மாதவங்கள் வருந்திச் செய்தார்
வெங்கணரா விளங்கும்இளம் பிறைசேர் சென்னி
விடையினார் அருள்சேர்ந்த சடையனா ரே. 75

கதைச் சுருக்கம்:

சடையனார், திருநாவலூரில் ஆதி சைவர் குலத்தில் உதித்தவர். இவரது வாழ்க்கைத் துணைவியார் இசைஞானி யார். தவநெறிக்கே இலக்காக அமைந்தவரும், சிங்கம் போன்றவரும், பரவையாரை வாழ்க்கைத் துணையாகக் கொண்டவரும், என்றும் மணக்கோலமே தாங்கியருளியவரு மாகிய சுந்தரர் தமக்குத் திருக்குமாரராக வந்து அவதரிக்கப் பெருந்தவம் செய்தவர், சடையனார் ஆவர்.

## 72. இசைஞானியார்

மார்கழி மீ திருவாதிரை நட்சத்திரம்.

நாவல்திருப் பதிக்கோர் செல்வச் சைவ
நாயகமாஞ் சடையனார் நயந்த இன்பப்
பூவைக் குலமடந்தை பொற்பார் கொம்பு
புனிதமிகு நீறணிந்து போற்றி செய்தே
ஆவில் திகழ்தலைவன் வலிய ஆண்ட
ஆரூரர் அவதரிக்க அருந்தவங்கள் புரிந்தார்
யாவர்க்கும் எட்டாத இசைந்த இன்ப
இசைஞானி எனஞானம் எளிதாம் அன்றே. 76

கதைச் சுருக்கம்:

திருநாவலூரில் வாழ்ந்த சிவநேசச்செல்வராகிய சடையனார்க்கு மனைவியார் இசைஞானியார்* ஆவர். இவர் தூய திருநீறணிபவர்; சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரம் செய்ய அருந்தவங்கள் புரிந்தவர். இவர் திருப்பெயரைக் கூறினாலே ஞானம் எளிதில் அடையலாம்.

---

* இசைஞானியார் - இவர் இசைத்திறமையில் சிறந்தவராக விளங்கியவர் என்பர்.

சிவசிவ

# திருப்பெருந்துறை ஸ்ரீ யோகாம்பிகை திருமுறைக் குழுவின் பணிகள்

1. வெளியூரில் இருந்து மதுரை வரும் சிவபூஜை சிவநேயச் செல்வர்களுக்கு எங்கள் இல்லத்தில் சங்கம வழிபாடு நிகழ்வித்தல்.
2. வருமானவரி விலக்கு உள்ள கோயில் திருப்பணி, புயல் நிவாரண நிதி, அன்னதானம், தொண்டு நிறுவனங்களுக்கு இயன்றளவு நன்கொடை வழங்குதல்.
3. பிரதி மாதம் ஒருமுறை ஞாயிறு தோறும் ஆலயங்களில் உழவாரப் பணி செய்தல்.
4. பிரதி தமிழ் மாதப்பிறப்பன்று மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயிலில் 63 நாயன்மார் சன்னதியில் 77 ஜோதி ஏற்றி திருமுறைப்பாராயணம் செய்தல்.
5. ஆண்டுதோறும் ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, சித்திரை மாதங்களில் ஒரு நாள் அன்னம் பாலிப்பு நிகழ்வித்தல்.
6. ஆண்டுதோறும் தீபாவளிக்கு முந்தின நாள் சிவபூஜகர், வேதம் ஓதுபவர், ஓதுவாமூர்த்திகள், ஏழை எளிய ஆண்கள் பெண்கள் முதலானோர்க்கு வஸ்திரதானம் வழங்குதல்.
7. ஆண்டுதோறும் செப்டம்பர் கடைசி வாரம், மேமாதம் பாடல் பெற்ற ஸ்தலங்கள் வழிபாடு நிகழ்வித்தல்.
8. ஒவ்வொரு தமிழ் மாதம் 2-ம் பிரதோஷம் திருவேட்கத்திலும் நடராஜர் மூர்த்திக்கு ஆண்டுக்கு 6 அபிசேகம் நிகழ்வித்தல்.
9. சிவராத்திரி அன்று, சிவபூஜை அடியார்களுக்கு வில்வம் விபூதிப்பை, சிவசிவ துண்டு, உள்கச்சை, வஸ்திரம் வழங்குதல்.

## மாகேசுர பூசை ஆசீர்வாதம்

அநாதிசித்த சர்வஞ்ஞதாதி சுத்தசாட்குண்ணிய பரிபூரண பரசிவாலய விக்கினேசுராலய சுப்பிரமணியாலயங்கள் எங்கும் நித்திய நைமித்திகங்கள் எல்லாம் வேதசிவாகமப் பிரகாரஞ் சிறப்பாக நடந்து வரும் பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக.
—ஹர ஹர.

மாதமும் மழை தவறாமல் பெய்து தானியாதி சகல வளங்களுஞ் செழித் தோங்கும் பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக.
—ஹர ஹர.

இராசா நீதி கோடாது செங்கோல் நடாத்தி அரசி யற்றும் பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக —ஹர ஹர.

விபூதி ருத்திராக்ஷ தாரணம் ஸ்ரீ பஞ்சாக்ஷா செபம் வேத சிவாகம படனந் தேவார திருவாசக பாராயணம் முதலிய சமஸ்த சிவபுண்ணியங்களும் தேசமெங்கும் அபிவிருத்தி யாகும் பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக - ஹர ஹர.

செல்வச் சிரஞ்சீவி..... ...... அவர்களுக்குக் குருலிங்க சங்கம புத்தியுஞ் சிவஞானமும் அரோகதிடகாத்திரமுந் தீர்க்காயுசுஞ் சிந்திதமனோரத சித்தியும் மேன்மேலும் பெருகும்பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக —ஹர ஹர.

மாகேசுர பூசை இந்தத் தானத்திலே சதா காலமுஞ் சிறப்பாக நடந்து வரும் பொருட்டு அநுக்கிரகம் பண்ணுக
—ஹர ஹர, ஹர ஹர, ஹர ஹர

மாகேசுரர்கள் எல்லாருஞ் சிரமந் தீரும்படி திருவமுது செய்து அருளுக. ஹர ஹர, ஹர ஹர, ஹர ஹர.

இன்று மகேஸ்வர பூஜை கைங்கர்யம் செய்யும் திருவாளர்........ ..........திருமதி .... ....... ... . ... அவர்களுடைய வாரிசுகள் நோயற்ற வாழ்வும் ஆரோக்கிய மான வளமும் சகல செல்வ சம்பத்துக்கள் பெறுவதாக.
— ஹர ஹர.